லவச இணைப்பை
கேட்டு வாங்குங்கள்

# கல்கி

KALKI 8.4.90 ரூ. 2.50



**சினிமா கலெக்டராய் ஜொலித்தவர்**
**சென்னை கலெக்டரைச் சந்திக்கிறார்**

# பாலைவனமாகிறது தஞ்சை மாவட்டம்!



**''தஞ்சாவூர் கூடிய சீக்கிரம் பாலைவனமாக மாறும் அபாயம் இருக்கிறது'' என்கிறார் டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி. கேள்விகளுக்கு ஆவேசத்துடனேயே பதிலளிக்கிறார்!**

நிருபர்: இந் நிலைமையை நீங்கள் நேரில் பார்த்தீர்களா?

பதில்: பார்த்து விட்டுத்தான் வயிறெரிய உங்களுடன் பேசிக் கொண்டிருக்கிறேன். குடவாசலுக்குப் பக்கத்தில் பெரிய நிலப் பிளவு ஏற்பட்டிருக்கிறது. அதே போல் ஆலூர் என்ற இடத்திலும்... இப்படியே போனால் பிரச்னைகள் அதிகமாகி விடும். நிலப்பிளவு அதிகரித்தால் பத்தடியிலிருந்து நூறடி அகலம் கூடப் போகும். அதனால் உடனடியாகக் கவனித்துத் தீர்வு காண வேண்டும். பாலைவனத்தில்தான் இம் மாதிரி நிலப்பிளவுகள் ஏற்படும். தஞ்சை ஒரு பாலைவனமாகி வருகிறது என்பதற்கு இது ஓர் அடையாளம். கடந்த மூன்று ஆண்டுகளாகத் தஞ்சையில் தண்ணீர்ப் பற்றாக்குறை தலைவிரித்தாடுகிறது. பத்தடி ஆழத்தில் ஒரு காலத்தில் கிடைத்த தண்ணீர், இன்று 200 அடி ஆழம் சென்றால்தான் கிடைக்கிறது! இப்படி நிலத்தடி நீரை வேகமாக உபயோகிக்க ஆரம்பித்தால் அபாயகரமான நிலை ஏற்படும் என்று நிபுணர்கள் எச்சரிக்கிறார்கள். இவை எல்லாவற்றுக்கும் காரணம், காவிரி நதி நீர் கிடைக்காததுதான்.

நிருபர்: ''ஒப்பந்தம் காலாவதியாகி விட்டது என்கிறார்களே?

பதில்: 1924 ஒப்பந்தம் காலாவதி என்கிற பேச்சுக்கே இடமில்லை. 1974ல் இருக்கின்ற நீர் உபயோக நிலையை அனுசரித்து உபரிநீர் பங்கீட்டைப் பேசுவதற்கு ஒப்பந்தம் வழி செய்கிறது. 1924 ஒப்பந்தம் காலாவதி என்றாலும் அதற்கு முன் ஏற்பட்ட 1892 ஒப்பந்தம் படி நடக்க வேண்டி இருக்கும். நமக்கு வர வேண்டிய நீரை இல்லை என்று கூற யாருக்கும் உரிமை கிடையாது. நமது தேவை பூர்த்தி ஆன பிறகுதான் அவர்களுக்கே கிடைக்கும். உலகளாவிய சட்டம் இது. ''ரைபீரியன் ரைட்ஸ்'' என்பது இதற்குப் பெயர். கடைசியாக அந்தத் தண்ணீரை யார் அனுபவித்துக் கொண்டிருந்தார்களோ அவர்களுக்குக் கொடுத்தே ஆக வேண்டும்.



• டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தி

நிருபர்: பின் கர்நாடக அரசு ஏன் கொடுக்க மறுக்கிறது?

பதில்: பேச்சு வார்த்தை என்ற போர்வையில் 18 வருஷங்களாக நம்மை ஏமாற்றி வருகிறது கர்நாடக அரசு. 30 டி. எம். சி. தண்ணீர் கேட்டால் மனிதாபிமானமே இல்லாமல் 5 டி. எம். சி. தண்ணீர் அளித்திருக்கிறது. அதுவும் சம்பா பயிர் அறுவடை முடிந்தபின்!

நிருபர்: இதற்கு என்ன முடிவு என நினைக்கிறீர்கள்?

பதில்: நடுவர் குழு தீர்ப்பு வந்தால் ஒரு நல்ல முடிவு ஏற்படும். இதுவரை 450 டி. எம். சி. தண்ணீர் கிடைத்து வந்தது. இனி

**ரகசியம்! பரம ரகசியம்!**

பார்லிமெண்டில் பட்ஜெட்டைச் சமர்ப்பிப்பதற்கு முன் அதை அச்சிடும் பணியில் ஈடுபட்டுள்ள ஒன்பது பேரும் அந்த அச்சகத்திலேயே நாலு நாட்களுக்குப் பூட்டி வைக்கப்படுவார்கள்; பார்லிமெண்டில் பட்ஜெட் உரை முடிந்த பின்பே வெளியில் விடப்படுவார்கள்!

பட்ஜெட் ரகசியம் வெளியில் தெரியக் கூடாது என்பதற்காக இந்த ஏற்பாடு!

ஆதாரம்: சண்டே அப்சர்வர்
தகவல்: வி. த. ஸ்ரீதரன்.

250லிருந்து 300 டி. எம். சி. தண்ணீர் வந்தால் கூடப் போதும். இப்பொழுது நாம் தண்ணீரைச் சிக்கனமாகச் செலவழிக்கக் கற்றுக் கொண்டு விட்டோம். கர்நாடக அரசு சட்டத்துக்குப் புறம்பாகப் பல்வேறு அணைக்கட்டுகளைக் கட்டியுள்ளது. மத்திய அரசின் ஒப்புதல் இல்லாமல், திட்டக் கமிஷனின் ஒப்புதல் இல்லாமல் கட்டியுள்ளது.

நிருபர்: மத்திய அரசு இதை ஏன் சகித்துக் கொண்டிருந்தது?

பதில்: அதுதான் அரசியல்! கர்நாடக அரசு மீது மத்திய அரசு நடவடிக்கை எடுக்கவில்லை. அத்துடன் சுப்ரீம் கோர்ட்டில் நாம் போட்டிருந்த வழக்கையும் மத்திய அரசு நம்மை விலக்கிக் கொள்ளச் சொன்னது. எல்லாவற்றுக்கும் அரசியல் செல்வாக்கும் அரசியல் பின்னணியும் இருக்கிறது. மக்கள் நலன் பின்னுக்குத் தள்ளப்படுகிறது.

நிருபர்: தஞ்சைக்குத் தண்ணீர் இல்லாவிட்டாலும் கர்நாடக அரசு காவிரி நீரைச் சிறப்பாகப் பயன்படுத்துகிறதே என்று நாம் ஏன் மகிழக் கூடாது? அது ஒருமைப்பாடாகாதா?

பதில்: காவிரி நீர் பாயும் கர்நாடகம் மண்வளம் நிறைந்ததல்ல. அங்கே காவிரி நீர் வீணாகிறது. கர்நாடக அரசு 1 டி. எம். சி. தண்ணீரை உபயோகித்து 4000 ஏக்கரைப் பயிர் செய்து 4000 டன் நெல் உற்பத்தி செய்கிறது. ஆனால் அதே ஒரு டி. எம். சி. தண்ணீர் தமிழ் நாட்டில் பத்தாயிரம் ஏக்கருக்குப் பாய்ந்து 20,000 டன் நெல்லை உற்பத்தி செய்கிறது. ஆக மொத்தம் தஞ்சைக்கு நீர் வராததால் நாட்டுக்கு ஏற்படும் நஷ்டம் கணக்கிலடங்காதது. ஒருமைப்பாடு உணர்வு என்பது ஒட்டு மொத்தமாக நாட்டின் நலன் கருதி செயல்பட வேண்டும். தேசத்துக்கு நஷ்டம் உண்டாக்க விட்டுக் கொடுப்பது ஒருமைப்பாடல்ல; முட்டாள்தனம்!

நிருபர்: நதிகளைத் தேசியமயமாக்குவதால் இந்தப் பிரச்னை தீர்ந்து விடும் என நினைக்கிறீர்களா?

பதில்: நமது நாட்டில் இன்று அறுபது சதவிகித நீர் யாருக்கும் பயன்படாமல் கடலில் போய்ச் சேருகிறது. ஒரிசாவில் மகாநதி. ஆந்திராவில் கோதாவரி, கிருஷ்ணா, கேரளத்து ஆறுகள் என்று கடலில் போய்ச் சேரும் தண்ணீருக்கு அளவே இல்லை. இந்த நிலைமையை மாற்றுவதற்காகத்தான் நதிகளைத் தேசியமயமாக்க வேண்டும் என்று கூறுகிறோம்.

நிருபர்: நதிகளைத் தேசியமயமாக்க வேண்டும் என்று சொன்னால் மட்டும் போதுமா? அதற்காக உங்கள் இயக்கம் என்ன செய்கிறது?

பதில்: முதல் கட்டமாக மார்ச் 18ம் தேதி குடந்தையில் பெரிய மாநாடு நடத்தினோம். அடுத்த கட்டமாக, மக்கள் சக்தி இயக்க உறுப்பினர்கள் பூம்புகாரிலிருந்து மேட்டூருக்குப் பாதயாத்திரை செல்கிறோம். பிறகு மத்திய அரசு அலுவலகங்கள் முன் மறியல் நடத்த திட்டம் இருக்கிறது. நான்காவது கட்டமாக 50,000 போஸ்டர்களை அச்சடித்துப் புது டெல்லியில் ஒட்டவிருக்கிறோம்.

நிருபர்: "நதிகளைத் தேசியமயமாக்குங்கள். நதிகளை இணையுங்கள்" என்றெல்லாம் சொல்வது சுலபமாக இருக்கிறது. ஆனால் நதிகளை இணைப்பது எனில் எவ்வளவு செலவாகும்? பணத்துக்கு எங்கே போவது?

பதில்: மனிதன் சந்திர மண்டலத்துக்குச் சென்று திரும்பும் நாள் இது. கங்கை — காவிரியையா இணைக்க முடியாது? "நடக்குமா? சாத்தியமா?" என்று யோசனையிலேயே காலம் கடத்தாமல் 'நம்மால் முடியும்' என்ற நம்பிக்கையோடு முயற்சிகளை மேற்கொண்டால், படிப்படியாகச் சாதிக்கலாம். நாளைக்கே கங்கையையும் காவிரியையும் இணைக்க வேண்டுமா என்ன? முதல் கட்டமாக மகாநதியை கோதாவரியுடனும், கிருஷ்ணாவை வடபெண்ணை — பாலாறுடனும் இணைக்கலாமே? எது முக்கியம், எதற்கு முன்னுரிமை என்று நம் அரசியல்வாதிகளுக்குத் தெரியவேயில்லை. மனிதனுக்கு அத்தியாவசியத் தேவையான தண்ணீரை மறந்து விட்டு மற்ற எல்லாவற்றைப் பற்றியும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். எல்லாவற்றிலும் அரசியல் புகுந்து ஆட்கொண்டு விட்டது. அரசியல்வாதிகள் எல்லோருமே சுயநலத்துடன் வேலை செய்கிறார்கள். ஒவ்வொரு மாநிலமும் ஒவ்வொரு நாடு என்று நினைக்காமல் ஒற்றுமையாக இந்தப் பிரச்னையை அணுக வேண்டும். அப்படியானால் சர்வதேச அளவில் கூட நிதி வசதியும் ஒத்துழைப்பும் கிடைக்கும். நம்மிடம் ஒற்றுமை இல்லையென்றால் உதவ மாட்டார்கள்.

பேட்டி: திலிலாராஜா



# கவிதை பாடும் அலைகள்

"அலைகள் ஓய்வதில்லை'' மாதிரி ஓர் அமர்க்களமான டீன் ஏஜ் காதல் கதை தர ஆசைப்பட்டது புரிகிறது. டீன் ஏஜ் வயசில் பழைய முகம் கிடைக்காது என்பது உண்மைதான். அதற்காக ஏதோ ஒரு ப்ளஸ் டூ பள்ளி வாசலில் நின்று கொண்டு குத்து மதிப்பாய் ஒரு பையனையும் பெண்ணையும் — ராஜ்மோகன், ஜனனி — பிடித்துப் போட்டுவிடுவதா?

பள்ளிக்கூடப் பிள்ளைகள் சினிமாவினால் கெட்டுப் போகிறார்கள் என்று பொறுப்புணர்வுடன் சில பெரியவர்கள் கூறத்தான் செய்கிறார்கள். அது என்ன ஏது என்று சரியாகப் புரிந்து கொள்ளாமல் அபத்தமான காட்சிகளைப் புகுத்துவதா? இளசுகளுக்குக் காதல் பண்ணும் வயசில்லையாம். அதனால் தனிமைச் சந்திப்பில் என்ன பண்ணுவது என்று தெரியாமல், 'சினிமாவில் வருகிற மாதிரி நான் உன் காலிலிருந்து தலைவரை முத்தம் கொடுத்துக் கொண்டே போகட்டுமா?' என்று சம்மதம் வாங்கிச் செயல்படுகிறானாம். தொடர்ந்து வேறு பல அசிங்கங்கள்.

உள்ளபடி கதாநாயக லட்சணத்தோடு தெரிகிறவர் ராதாரவிதான். அழுத்தமான ஆழமான பாத்திரம். போலீஸ் துரத்த சிறையிலிருந்து தப்பியோடி வந்து அடிபட்டு ஆற்றோரம் விழுந்து கிடக்கும் போது ஏதோ வில்லன் முத்திரை (பழக்க தோஷம்) காட்டினாலும் அன்பும், பாசமும், அதே சமயம் சிறுமை கண்டு பொங்கும் சீற்றமும் காட்டியிருப்பது அழுத்தம். மனசில் நிற்கிறார்.

பேசாமடந்தைப் பேரிளம்பெண் சபீதா ஆனந்த் கண்ணாலேயே நிறையப் பேசியிருக்கிறார். தன்னை வலிய வந்து மணந்து கொள்ளச் சம்மதம் கேட்ட முறை உறவான இன்ஸ்பெக்டரிடம், தமது இயலாமையைத் தெரிவிக்கத் திணறல் காட்டும் கட்டத்தில் அந்த ஊமைக் கண்ணீர் உள்ளத்தைத் தொடுகிறது.

தன் பேரையும் தன் காதலன் பேரையும் இணைத்துச் சோப்புத் துண்டால் ரவி சீதா என்று பல துண்டுக் காகிதங்களில் எழுதி, அவற்றை ஆற்றில் இறைத்துச் சபீதா ஆனந்தப்படுவது டைரக்டோரியல் டச். புது டைரக்டர் டி. ஜே. போஸ்.

அந்த இன்ஸ்பெக்டர் உருவம், பேச்சு, நடத்தை, பாவம் அத்தனையும் ராஜேஷ். இருக்காதோ பின்னே? அன்னார் அவருக்கு அண்ணாராமே!

ஜனகராஜின் பெருவீச்சுக் காட்டியிருக்கிறார் சின்னி ஜெயந்த். 'இன்னிக்கு நூறு தந்தா நாளைக்கு இருநூறு திருப்பித் தரணும்' என்று சொற்ப வட்டிக்குக் கடன் தரும் அவரும், அவர் மாப்பிள்ளை பயில்வான் ரங்கநாதனும் நடுநடுவே தலைநீட்டி ஏதோ துயர் துடைக்கும் கைங்கர்யம் போல் செய்கிறார்கள்.

'ராகதேவன் இளையராஜாவின்' என்ற அறிவிப்பை நம்பிச் செல்லும் இசைப்பிரியர்களைப் படம் ஏமாற்றவில்லை. காமிரா ஒவ்வோர் இடங்களில் சும்மா அள்ளிக் கொண்டு போகிறது.

இருந்தும் —

மன்னிக்க வேண்டும். புதுமுகங்களின் சுருதி பேதத்தால் இருப்புக் கொள்ள முடியாத தவிப்பு.

— பி. எஸ். எஸ்.

# சினிமா கலெக்டராய் ஜொலித்தவர் சென்னை கலெக்டரைச் சந்திக்கிறார்

சௌகார் ஜானகி: ஐ. ஏ. எஸ். பணியைத் தேர்ந்தெடுத்ததற்கு ஏதேனும் குறிப்பிட்ட காரணம் உண்டா?

சென்னை கலெக்டர் ஷீலாராணி சுங்கத்: என் தந்தையின் தூண்டுதலும் ஊக்குவிப்பும் என்னை இத் துறையில் ஈடுபடுத்தின. எனக்கு ஐ.எஃப்.எஸ். ஆகி அயல்நாடுகளில் பணியாற்ற வேண்டும் என்று ஒரு ஆசை இருந்தபோது, என் அப்பா இந்தியாவில் பணியாற்றுவதே மன நிறைவைத் தரும் என்று கூறி வந்தார். அவர் சொன்னது மெய்யாகியும் விட்டது.

ஜானகி: சென்னை மாநில கலெக்டர் மற்ற மாவட்ட கலெக்டர்களிலிருந்து எப்படி வேறுபடுகிறார்? இங்கே என்ன பொறுப்புக்கள்...?



ஷீலா: மாவட்ட கலெக்டர்களுக்குச சட்டம் ஒழுங்கைப் பராமரிக்கும் பொறுப்பு உண்டு. சென்னையில் அப் பொறுப்பு கமிஷனரிடம் இருக்கிறது. அதே போல் சிவில் சப்ளைஸ் போன்ற மற்ற துறைகளிலும் உள்ள உயர்மட்ட அதிகாரி சென்னையிலேயே இருப்பதால் அத் துறைகளைக் கவனித்துக் கொள்வார். மாவட்டங்களில் மாநில அரசின் பல்வேறு துறைகளின் உயர் அதிகாரிகள் இருக்க மாட்டார்கள். அவர்களின் கீழ் பணியாற்றும் ஜூனியர் அதிகாரிகள்தான் இருப்பார்கள். எனவே பல்வேறு துறைகளுக்கும் இடையே கலெக்டர் இணைப்புப் பாலமாய் இருப்பார். மேலும் மாவட்ட கலெக்டர் மத்திய, மாநில அரசுகளின் ஊரக வளர்ச்சிப் பணித் திட்டங்களையும் கவனிக்க வேண்டும்...

ஜானகி: ஒரு பெண் கலெக்டர் என்கிற முறையில் உங்கள் பணியில் ஏதேனும் கஷ்டங்களைச் சந்தித்ததுண்டா? ஆண் ஆதிக்கம் மிக்க துறையாயிற்றே...?

ஷீலா: பெண் என்பதால் தனிப்பட்ட முறையில் பிரச்னைகள் எழாது. ஆண் என்பதாலோ பெண் என்பதாலோ கலெக்டர் பதவிக்கு உரிய அதிகாரங்கள் குறையவோ கூடவோ போவதில்லை. சப்-கலெக்டராக நான் இருந்த நாட்களில் தேவை ஏற்பட்டால், இரவு நேரங்களில் கூட தனியாக ஜீப்பில் சென்று பணியாற்றியிருக்கிறேன்.

ஜானகி: கேட்கவே சந்தோஷமாகயிருக்கிறது. அரசு அதிகாரிகளுக்குத் தமிழ் மொழியைக் கையாண்டு செயல்படத் தெரிய வேண்டும் என்று முதல்வர் புதிய கட்டுப்பாடு விதித்திருப்பது பற்றி உங்கள் கருத்து என்ன?

ஷீலா: அதை நான் வரவேற்கிறேன். எனக்குத் தாய் மொழி தமிழ். என் வட இந்திய சகாக்கள் பலர் மகிழ்ச்சியுடன் தமிழ் கற்றுக்கொண்டு பெருமையோடு பணியாற்றுகின்றனர். பயிற்சிக் காலத்திலேயே பல மொழிகளில் அடிப்படைப் பாடம் எங்களுக்குச் சொல்லித் தரப்படுகிறது. என் கணவரின் தாய் மொழி மலையாளம். எனினும் அவர் தமிழ் கற்று, கடினமான பரீட்சையில் பாஸ் ஆகியுள்ளார்.

ஜானகி: சினிமாவில் காட்டப்படும் கலெக்டர்கள் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ஷீலா: அந்தப் பாத்திரப் படைப்பிலும் சித்திரிப்பிலும் ஓரளவுதான் நிஜத்தின் சாயல் இருக்கிறது. ரசிகர்களுக்காக சினிமா கதை மிகைப்படுத்தப்படுகிறது. ஓர் அசல் கலெக்டரின் பணிக் காலம், சினிமா கலெக்டருடையதைப் போல் தொடர்ச்சியாகப் போராட்டங்கள் நிறைந்ததாக இராது. ஐந்

தாறு கலெக்டர்களின் வாழ்க்கையை இணைத்துப் பார்க்கும்போது ஒரு பரபரப்பான சினிமாக் கதை கிடைக்கக்கூடும்.

ஜானகி: இரு கோடுகள் படத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன். அதிகம் படித்திராத எனக்கு அதில் கலெக்டராக நடிக்க வாய்ப்பு கிடைத்த போது சந்தோஷமாக இருந்தது. ஏனென்றால், நல்ல குடும்பப் பின்னணியில் பிறந்து வளர்ந்த எனக்கு, உயர் படிப்புப் படித்து ஒரு கலெக்டராகவோ வக்கீலாகவோ வர வேண்டும் என்றுதான் சின்ன வயதில் ஆசை...

ஷீலா: அந்த ஆசையை, அப் படத்தில் பிரமாதமாக நடித்ததன் மூலமாக ஓரளவு நிறைவேற்றிக் கொண்டீர்கள் என நினைக்கிறேன். அப் படத்தில் என்னை உறுத்திய விஷயம் ஒவ்வொரு முறை கணவர் வரும் போதும் பெண் கலெக்டர் பவ்யமாய் எழுந்து நிற்பதுதான். மிகைப்படுத்தப்பட்டதாக அச் செயல் எனக்குத் தோன்றியது.

ஜானகி: 1969 இல் எடுத்த படம்! அந்தக் காலப் பெண்கள் அந்த 'ஸெண்டிமெண்ட்'டை வரவேற்றார்கள். கணவன் பெயரைக் கூடச் சொல்லக் கூடாது என்று நினைத்தார்கள். அவர்களுக்காகப் படத்தில் புகுத்தப்பட்ட 'ஸெண்டிமெண்ட்' தான் அது...

ஷீலா: இருபது வருஷங்களுக்கு முன் அப் படத்தைப் பார்த்த போது கூட அந்தக் காட்சிகளை நான் ரசிக்கவில்லை. சின்ன வயது முதலே ஆணுக்குப் பெண் சரி நிகர் சமானம் என்றும், ஒவ்வொரு அம்சத்தையும் ஒப்பு நோக்கி மதிப்பிடுவது தவறு என்றும் வலுவான எண்ணங்கள் என் மனத்தில் விழுந்து விட்டன...

ஜானகி: உங்கள் கருத்தை நானும் ஏற்றுக் கொள்கிறேன். இன்றைக்குக் காலத்தோடு பெண்களின் நிலையும் ஓரளவு மாறியிருக்கிறது. 1969 இல் எத்தனை பெண் கலெக்டர்கள் இருந்திருப்பார்கள்? இப்போது எவ்வளவு பெண் கலெக்டர்கள் இருக்கிறார்கள்?

ஷீலா: அப்போது 3500 ஐ. ஏ. எஸ். அதிகாரிகளுள் சுமார் ஐந்து சதவிகிதத்தினர் பெண்களாக இருந்திருப்பார்கள்; இப்போது சுமார் நான்காயிரம் அதிகாரிகளுள் பத்து சதவிகிதம் பேர் பெண்கள்.

ஜானகி: உங்கள் பணியில் அரசியல் தலையீடு காரணமாக உங்கள் விருப்பத்துக்கு மாறாக நீங்கள் செயலாற்ற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறதா?

ஷீலா: என்னை யாரும் அவ்வாறு நிர்ப்பந்திக்க விட மாட்டேன். அதே சமயத்தில் அரசியல் ஆதிக்கமுள்ளவர்களின் நியாயமான கோரிக்கைகளையும் பரிசீலிக்காமல் இருக்க மாட்டேன்.

ஜானகி: கலெக்டர் என்றாலே பய பக்தியோடு பொது மக்கள் அணுகுவதையும் அந்தப் பதவிக்கு ஒரு தனி மிடுக்கும் கௌரவமும் இருப்பதையும் நீங்கள் வரவேற்கிறீர்களா?

ஷீலா: கௌரவமான பதவி என்னும் போதே பொறுப்பும் பன்மடங்கு அதிகரிக்கிறதல்லவா. மக்கள் நம் மீது மதிப்பு வைக்கும்போதே அதீத நம்பிக்கையும் வைக்கிறார்கள் அல்லவா....! ஐம்பது ரூபாய் முதியோர் பென்ஷன் பெறும் ஒரு கிழவி என்னிடம் வந்து 'நான் உங்களைத்தான் நம்பியிருக்கிறேன்' என்கிறாள். அவளுக்கு நான் மேற்கொண்டு செய்யக் கூடியது எதுவுமில்லை என்று தெரியும். ஆனால் அதை அவள் முகத்திற்கு நேராகச் சொல்லவும் முடியாது. அதே சமயத்தில் பொய்யான நம்பிக்கையை ஊட்டவும் முடியாது. தர்மசங்கடங்கள் பல...

ஜானகி: அரசாங்கம் இப்படிப்பட்ட சமுதாய நலத் திட்டங்களை நிறையவே வைத்திருக்கிறது. இலவசமாக எல்லாவற்றையும் வழங்கி மக்களைக் கையேந்தச் செய்வது எனக்கு உடன்பாடில்லை. திட்டங்கள் நிறைவேற்றப்படுவதிலும் ஊழல் அதிகம். சத்துணவுத் திட்டத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். இரண்டு முறை நான் சத்துணவுக் கூடங்களுக்குப் போயிருக்கிறேன். அந்த அசுத்தத்தைச் சொல்லி முடியாது. அந்தச் சாப்பாட்டை நான் கையால் தொடக் கூடத் தயங்கினேன். ஈ மொய்த்துக் கொண்டு... குழந்தைகள் எல்லாம் ஒழுங்கின்றி, அசுத்தமாக.....

ஷீலா: நான் உங்கள் கருத்தை ஒப்புக் கொள்ள மாட்டேன். கிராமப் பகுதிகளில் உள்ள மையங்களை நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். அங்கு இடவசதி கூடுதல் என்பதால் இன்னும் கொஞ்சம் சுத்தமாகவும் சுகாதாரமாகவும் இருக்கும். மதியம் பன்னிரண்டு மணிக்குப் போனால் ஒரு பருக்கை சோறு மிச்சம் வைக்காமல் அந்தக் குழந்தைகள் சாப்பிடுவதைப் பார்த்து மனசு உருகி



விடும். அவ்வளவு பசி! அந்தத் தாய்மார்களுக்கு ஒருவேளை சமையல் செய்ய நேரம் இருக்காது. மையும் பொரையும் சாப்பிடுவதற்குப் பதில் பிள்ளைகள் அரிசி, பருப்பு, காய்கறிகளால் ஆன உணவு உண்பது எவ்வளவோ மேல்.

ஜானகி: திட்டம் நல்லது என்பதை நான் மறுக்கவில்லை. அதைச் சரியாக ஊழலின்றி நிறைவேற்றுவதில்லை என்பதுதான் என் குற்றச்சாட்டு.

வஸீலா: வருடம் 365 நாளும் என்பது லட்சம் குழந்தைகளுக்குச் சத்துணவு அளிப்பது என்பது மிகப் பெரிய காரியம். உலகிலேயே மிகப் பிரும்மாண்டமான திட்டம் என்று கூறுவது தவறாகாது. எனவே, அரசாங்கம், ஊழியர்கள், பிள்ளைகளின் பெற்றோர் என்று பல தரப்பினருடைய முழு ஒத்துழைப்பும் ஈடுபாடும் வேண்டும். சில நடைமுறைப் பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும்....

ஜானகி: உங்கள் தீவிரப் பேச்சில் உங்களுடைய ஈடுபாடு வெளிப்படுகிறது. மகிழ்ச்சியாக இருக்கிறது.

வஸீலா: நீங்கள் சினிமாத் துறைக்கு எப்படி வந்தீர்கள்?

ஜானகி: சினிமா பார்ப்பதே தவறு என்று நம்பிய ஆசாரமிக்க குடும்பம் எங்களுடையது. ஆனால் என் அப்பா கொஞ்சம் முற்போக்குவாதி. காந்தியத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார். பணி நிமித்தம் அவருடன் ஊர் ஊராகச் சென்ற போது என் பார்வையும் மனமும் ஓரளவு விசாலமடைந்தனவே யொழிய முறையான கல்வி கற்கும் வாய்ப்பு கிடைக்கவில்லை. சென்னையில் எங்கள் குடும்பம் வசித்த போது ரேடியோ நாடகங்களில் பங்கேற்பேன். அப்பா என்னை அனுமதித்தாலும் சகோதரர்கள் அதைத் தட்டிக் கேட்பார்கள். இப்படி இருக்கையில் ரேடியோ நாடகத்தில் என் குரலைக் கேட்ட தயாரிப்பாளர் பி. என். ரெட்டி நான் சினிமாவில் நடிக்கத் தயாரா என்று கேட்டார்! குதூகலத்துடன் வீட்டிற்கு வந்து அப்பாவிடம் சொன்னேன். அப்பா சம்மதித்தாலும் அம்மா ஒரேயடியாக மறுத்து விட்டார். அதோடு, பயந்து போய் எனக்குத் திருமணமும் செய்து வைத்து விட்டார். அப்போது எனக்குப் பதினைந்து வயதுதான்! பதினேழாவது வயதில் முதல் குழந்தை பிறந்தாள். இதற்கிடையில் என் கணவர், உழைத்துச் சம்பாதிப்பதில் நாட்டமற்றவர் என்பது எனக்குப் புரிந்து போயிற்று. குடும்பத்தைக் காப்பாற்ற நான் ஏதேனும் வேலை செய்தாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்ட போது படிப்போ பட்டமோ இல்லாத நான், எனது சிறிதளவு நடிப்பு அனுபவத்தை மட்டுமே நம்ப முடியும் என்கிற நிலை... கையில் குழந்தையுடன் பி. என். ரெட்டியிடம் போய் இப்போது எனக்கு வாய்ப்பு அளிக்க முடியுமா என்று கேட்டேன். 'குடும்பப் பெண் சினிமாவுக்கு வரக் கூடாது' என்று அவர் என்னைத் திருப்பியனுப்ப முயன்றார். நான் பிடிவாதமாக இருந்ததால் வேறு வழியின்றித் தமது சகோதரர் நாகி ரெட்டிக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தார். எல். வி. பிரஸாத்ஜி ஸ்க்ரீன் டெஸ்ட் கொடுத்தார். ஏதோ சின்ன வேடம் தருவார்கள் என்று நினைத்தேன். எடுத்த எடுப்பிலேயே கதாநாயகி! முதல் படம் வெற்றி அடைந்தது. ஆனாலும் உனக்கு மற்ற நடிகைகளைப் போல் கவர்ச்சி இல்லை என்று கூறி என்னை வீட்டுக்கு அனுப்பத்தான் முயன்றார்கள். போராடி என் திறமையை நிரூபித்து எனக்கென்று ஓர் இடம் பிடித்துக் கொண்டேன்...

வஸீலா: இவ்வளவு வருடங்களாக இத்துறையில் இருந்தும் உங்கள் கௌரவத்தைக் காப்பாற்றி வருகிறீர்கள். அதுதான் எனக்கு உங்களிடம் மதிப்பை ஏற்படுத்துகிறது.

ஜானகி: எக்காரணம் கொண்டும் யாரிடமும் சலுகைகள் கேட்கக் கூடாது என்ற கொள்கையில் நான் மிகத் தீவிரமாய் இருந்ததால் என் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது. என் குழந்தைகளிடம் கூட என் பெயரைப் பயன்படுத்திக் காரியங்கள் சாதித்துக் கொள்ளக் கூடாது என்று மிகவும் கண்டிப்பாகக் கூறுவேன். அவர்களும் கட்டுப்பட்டு இருப்பார்கள். என்னை மதிக்காதவர்களிடம், வாங்கிய அட்வான்ஸைத் திருப்பிக் கொடுத்து விட்டு நான் வெளியேறிய நாட்கள் ஏராளம். 'ஜானகி கோபக்காரி' என்ற பெயர் கூட எனக்கு உண்டு. ஆனால் அது என்னைப் பாதிக்காது.

வஸீலா: உங்கள் காலத்தைப் பார்க்கச் சினிமா உலகம் தற்போது அதிகம் மாறியுள்ளது என்பீர்களா.. உங்கள் பேத்தி வைஷ்ணவி இப்போது இத்துறையில் அடியெடுத்து வைத்திருக்கிறாரே...?

ஜானகி: அன்றும் சரி, இன்றும் சரி, திறமைக்கு அதிக மதிப்புக் கிடையாது. அந்த வகையில் வைஷ்ணவி என்னை விட அதிகம் போராட வேண்டியிருக்கும். நானும் அவளை அவசரப்படாமல் கவனமாக 'ரோல்'களைத் தேர்ந்தெடுக்கும்படி அறிவுரை சொல்கிறேன்.

வஸீலா: பெண்களைப் 'பயன்'படுத்திக் கொண்டு இஷ்டப்படி ஆட்டி வைக்க முடியாது என்ற நிலைமை சினிமா துறையில் வரவே வராதா?

ஜானகி: இப்போதே சில படித்த இளம் பெண்கள் உறுதியாக இருக்கிறார்கள். ஆனால் பொதுவாகச் சினிமா துறையில் உள்ளவர்கள் எப்போதும் பிரபலமாக இருக்க வேண்டும் என்ற பேராசையில்

கொள்கைகளை விட்டுக் கொடுத்து விடு கிறார்கள். கல்வி அறிவும் நல்ல கலாசாரப் பின்னணியும் இல்லாமை இதற்கு ஒரு காரணம்.

ஷீலா: பார்க்கப் போனால் நம் நாட்டில் எல்லாத் துறையிலும் பெண்களின் நிலை ரொம்ப பரிதாபகரமானதுதான். குறிப்பாகக் கிராமப்புறத்துப் பெண்களை எடுத்துக் கொள்ளுங்கள். காலையும் மாலையும் வீட்டு நிர்வாகத்தையும் வீட்டு வேலைகளையும் கவனிப்பதோடு நிலத்திலும் விவசாயப் பணி செய்கிறாள். குடும்ப வருவாயைப் பெருக்க ஆடு, மாடு, கோழி வளர்த்து பால் விற்று, வரட்டி தட்டி... ஒரு நாளில் பதினெட்டு மணி நேரம் வேலை செய்தாலும் அவளுடைய பணிகளுக்கு அங்கீகாரம் கிடைப்பதில்லை.

ஜானகி: ஆமாம். அதுதான் சாக்கு என்று அவர்களுடைய கணவன்மார்கள் சோம்பேறிகளாகிவிடுவார்கள்.

ஷீலா: கிராமத்துப் பெண்களின் நிலை இப்படி என்றால் படித்த பெண்கள் வீட்டு வேலைகளுக்கு இடையூறு செய்யாத குறைவான பொறுப்புள்ள பணிகளையே செய்ய வேண்டும் என்று ஆண்கள் வற்புறுத்துகிறார்கள். ஆனால் பெண்களால் 'பைலட்' ஆகவும் 'ஜட்ஜ்' ஆகவும் இருந்து கொண்டு வீட்டுப் பொறுப்புகளையும் நன்றாகவே சமாளிக்க முடிகிறது.

ஜானகி: வீட்டு வேலைகளைச் செய்வதில் மனைவிக்கு உதவியதாகக் கூச்சமின்றி, அவமான உணர்வின்றி சொல்லிக் கொள்ளும் ஆண்கள் வெகு குறைவு. அப்படியே அவர்கள் சொல்லிக் கொண்டாலும் உலகம் அவர்களைக் கிண்டல் செய்கிறது.

ஷீலா: கணவன் — மனைவி இருவருமே சமமான அடிப்படை உரிமைகளையுடைய மனிதர்கள். என்னுடைய இந்த நம்பிக்கையை எனது கணவரும் பகிர்ந்து கொள்கிறார். அதனால்தான் எங்கள் மகளுக்கு எஸ். (ஷீலா) எம். (மோஹன்) அனுத்தமா என்று நாங்கள் பெயர் வைத்திருக்கிறோம்.

ஜானகி: உங்கள் கணவரும் நீங்களும் இவ்வளவு அழகாக ஒருவரையொருவர் புரிந்து கொண்டு வாழ்க்கை நடத்துவதை அறிந்து ரொம்ப சந்தோஷப்படுகிறேன். உங்கள் வெற்றிகரமான வாழ்க்கைக்குக் காரணம் உங்கள் அதிர்ஷ்டம் மட்டும் அல்ல. உங்கள் கொள்கைப் பிடிப்பும்தான்... என் வாழ்க்கையைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்...? ஒரு பெண் என்ற முறையில் நான் ஏதேனும் கடமையில் தவறியிருப்பதாக உங்களுக்குப் படுகிறதா?

ஷீலா: இல்லவே இல்லை! நீங்கள் அற்புதமாகப் போராடியிருக்கிறீர்கள். உங்களுக்



"இண்டர்வியூ நடக்கிற இடத்துல ஏதோ ஏலம் விடற மாதிரி சப்தம் கேட்குதே?"

"யார் லஞ்சம் அதிகமா தருவாங்கன்னு முடிவு பண்றாங்களாம்!"

— வி. ரேவதி.

கென்று ஒரு பெயரை ஏற்படுத்திக் கொண்டதோடு, உங்கள் குழந்தைகளையும் சிறந்த மனிதர்களாக உருவாக்கியிருக்கிறீர்கள்.

ஜானகி: ஆனால் என் மணவாழ்க்கையை வெற்றிகரமாக நடத்த முடியாமல் போனதற்கு என்னைப் பலர் குற்றம் சாட்டுகிறார்கள். அந்த உறவைக் காப்பாற்ற நான் எவ்வளவோ முயன்றேன். ஆனால் என் முயற்சி மட்டுமே போதாது அல்லவா?

ஷீலா: எப்பாடுபட்டாவது, என்ன விலை கொடுத்தாலும் திருமண பந்தத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று எண்ணுவதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. நான் சமூகநலத் துறையில் டைரக்டராக இருந்த போது, பல பெண்கள், அடித்துத் துன்புறுத்திய கணவனுடன் சமரசம் செய்து கொண்டு வாழவே வழி கேட்பார்கள். என்னால் அந்த மனப் போக்கை ஜீரணிக்கவே முடியவில்லை. அடி உதை படாத பெண்கள் கூட பல குடும்பங்களில் உழைக்கும் இயந்திரங்களாகப் பயன்படுத்தப்படுகிறார்கள். இவர்களிடம் 'உங்கள் எதிர்ப்பை வாய் வார்த்தையாகக் கட்டாயம் தெரிவியுங்கள் — உங்கள் மனத்தைக் கணவருக்குப் புரிய வையுங்கள்' என்று நான் சொல்வதுண்டு. இப்படிப் பல சம்பவங்கள் என்னை ஆழமாக பாதித்ததைக் கொண்டு சிறுகதைகள் எழுதியுள்ளேன் — ஆங்கிலத்தில்.

....பேசிக் கொண்டேயிருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை. ....உரையாடலை முடிப்பதற்கு முன்னால் ஒரு ரகசியம்.... நான் கூட ஐ. ஏ. எஸ். பயிற்சி கல்லூரியில் சிறந்த நடிகைக்கான பரிசு வாங்கியிருக்கிறேன் — கிழவி வேஷம்!

ஜானகி: சபாஷ்! பல்துறை வல்லுனர் தான் நீங்கள். சீக்கிரமே உங்கள் சிறுகதைத் தொகுப்பைக் காண ஆவலாய் இருக்கிறேன்.

தொகுப்பு: சீதா ரவி

அட்டை வண்ணப்படம் மற்றும் புகைப் படங்கள்: யோகா.




ஓர் ஆண்டின் மொத்த வர்த்தகம் என்ற அடிப்படையில், இந்தியாவின் டாப் நான்கு கம்பெனிகள் எவை?

| | |
|---|---|
| டாடா குரூப் | 8413 கோடி |
| பிர்லா குரூப் | 3121 கோடி |
| அம்பானி குரூப் | 2019 கோடி |
| பஜாஜ் குரூப் | 1642 கோடி |

பாக்கேஜிங் உலகில் பெரிய விளம்பரச் சண்டை நடந்து கொண்டிருக்கிறது! 'டின்'களில் பாக்கிங் செய்வதே சிறப்பானது.' என்று கூறும் ஒரு விளம்பரம் வெளி வந்தது. உடனே, குளிர்பானங்கள் தயாரித்து, டெட்ரா பாக்குகளில் விற்பனை செய்யும் நிறுவனங்கள், ''எப்படி அப்படி விளம்பரம் செய்யப் போயிற்று?'' என்று எதிர்ப்புத் தெரிவிக்க, விளம்பர நிறுவனங்களின் கவுன்ஸிலில் கடிதப் போர் தொடர்ந்து கொண்டிருக்கிறது!





●● இந்தியாவின் முதல் 'நவீன' மருத்துவமனை துவக்கப்பட்டது சென்னையில்தான் என்றால் பலருக்கு ஆச்சரியமாக இருக்கும். ஆம்! சென்னை புனித ஜார்ஜ் கோட்டை வளாகத்தினுள்தான் அது ஆரம்பிக்கப்பட்டது. வருடம் 1664.

— ஸியெம்.

''டாக்டர், எங்க தாத்தா நாலு மணி நேரமா விக்கிக்கிட்டே இருக்கார்.''

''கின்னஸ்புத்தகத்துக்குஎழுதிப்போட வேண்டியதுதானே!''

— ராதா வாசுதேவன்.



''ஒரு நாளைக்கு ஒரு ஆப்பிள்னா, டாக்டர் நம்கிட்டவே வர வேண்டாம்; அதே மாதிரி ஒரு நாளைக்கு ஒரு பூண்டுன்னா....''

''டாக்டர் என்ன, ஒருத்தருமே கிட்டே வர மாட்டாங்க!''

— பாரதி.



# “தண்டவதேக்கு ரொம்ப தாங்க்ஸ்!”



தங்கக் கட்டுப்பாடு நீக்கப்பட்டதும் அதை முதன் முதலில் புகுத்திய மொரார்ஜி தேசாய் கூட வரவேற்றார் என்பது செய்தி. தேசாய் அச் சட்டத்தை ஏன் கொண்டு வந்தார்? தற்போது அது நீக்கப்பட்டுள்ளதால் ஏன் பாராட்டு? ஒரு பொருளாதார நிபுணர் விளக்கம் அளிக்கிறார்:



நமது நாட்டில் நகைகள் செய்து அணிந்து கொள்வதும், இந்த வடிவத்தில் சேமிப்பை வளர்த்துக் கொள்வதும் ஒரு பாரம்பரியமாகவே விளங்கி வருகிறது. மத்தியதர வகுப்பினர் பாங்க் லாக்கரில் பூட்டி வைக்கவாவது பத்துப் பதினைந்து பவுன் நகை இருந்தால்தான் கௌரவமாக இருக்கும் என்று நினைக்கிறார்கள். பெண் குழந்தை இருந்தால் அவள் திருமணத்தை உத்தேசித்து இந்தப் பவுன் ஆசை அதிகரிக்கிறது.

இத்தகைய சூழலில்தான் அன்றைய நிதி அமைச்சர் மொரார்ஜி தேசாய் தங்கக் கட்டுப்பாடு சட்டத்தைக் கொண்டு வந்தார். ஒரு நாட்டின் பொருளாதாரம் அரசிடம் உள்ள தங்கக் கையிருப்பைப் பொறுத்தே அமையும் என்ற நம்பிக்கையின் விளைவாகப் புகுத்தப்பட்டது அச் சட்டம். அரசிடம் உள்ள கையிருப்புத் தங்கத்தின் மதிப்புக்கு ஏற்பத்தான் ரூபாய் நோட்டுக்கள் அச்சிட வேண்டும் என்று எண்ணிய காலம் அது.

தங்கக் கட்டுப்பாடு அமுலானதும் பொது மக்களோ, நகை வியாபாரிகளோ, கொல்லர்களோ புதிதாகத் தங்கம் வாங்கி நகை செய்யக்கூடாது, பழைய நகைகளை, அழித்துத்தான் நகை செய்யலாம். புதிய தங்கத்தில் நகை செய்யப் பதினாலு காரட் தங்கம் மட்டுமே பயன்படுத்தலாம் என்ற நிலைமை உருவானது. இதனால், நாட்டில் அகழ்ந்தெடுக்கப்படும் புதிய தங்கம் முழுதும் அரசின் கையிருப்புக்கே போகும், அதன் மூலம் பொருளாதாரம் வலுப்படும் என்று நம்பப்பட்டது. நகைக் கடைக்காரர்களும் பொற்கொல்லர்களும் கையிருப்புத் தங்கத்துக்குக் கணக்குக் காட்ட வேண்டும்; அரசாங்கம் எப்போது வேண்டுமானாலும் எந்த நகைக் கடையையும் சோதனை போடலாம் – என்ற நிலை.

தங்க நகை பாரம்பரியம் உள்ள நமது நாட்டில் இந்தச் சட்டத்துக்கு வரவேற்பு இருந்திருக்குமா? நிச்சயமாக இல்லை. திருமாங்கல்யம் செய்ய மட்டும் இருபத்திரண்டு காரட் தங்கம் பயன்படுத்தலாம் என்று கட்டுப்பாடு தளர்த்தப்பட்ட போது கூட, சட்டம் மீறப்பட்டு, புதுப் புதுத் தங்க நகைகள் செய்யப்பட்டே வந்தன. கணக்கில் மட்டும் பழைய நகையை அழித்துப் புது நகை செய்ததாகக் காட்டப்பட்டு வந்தது.

புது நகைகள் செய்ய தங்கம் எங்கிருந்து வந்தது....? எல்லாம் கள்ளக் கடத்தல் மூலமாகத்தான். இதனால் தங்கக் கட்டுப்பாடு சட்டம் என்பது பெயரளவில் நிலவிய கேலிக் கூத்தானதோடு கள்ளக் கடத்தலுக்கும் வழிகோலியதால் அரசாங்கத்துக்கு ஏராளமான அந்நியச் செலாவணி வேறு நஷ்டமாயிற்று. எப்படி....?

அயல் நாடுகளிலிருந்து தங்கம் வாங்கிக் கடத்துபவர்களுக்கு அந்த நாட்டு ‘கரன்சி’ தேவைப்பட்டது. அந்நாட்டில் வசித்த இந்தியர்கள் நமது நாட்டில் உள்ள தங்கள் உறவினர்களுக்குப் பணம் அனுப்ப விரும்பினால், சாதாரணமாக செக்கில் டாலர் தொகை எழுதித், தபாலில் அனுப்பிவிடலாம். இந்தியா வரும் செக் மதிப்புக்கு ரிசர்வ் வங்கி ரூபாய் தரும். ஆனால் தங்கக் கடத்தல் வட்டத்தில் இருந்தவர்கள் இந்த என். ஆர். ஐக்களிடம் சென்று, டாலர்களுக்குக் கூடுதல் ரூபாய் கொடுத்து வாங்கிக் கொண்டார்கள். இப்படி கள்ளத்தனமாகப் பெறப்பட்ட அயல் நாட்டுப்



● பாலு: ''தண்டவதேக்கு ரொம்ப தாங்க்ஸ்!''

பணத்தைக் கொண்டு தங்கம் வாங்கிக் கடத்தி வந்தார்கள். எனவே ரிசர்வ் வங்கிக்கு நியாயமாக வந்து சேர வேண்டிய அந்நியச் செலாவணி நஷ்டமாயிற்று. ஒவ்வொரு வருடமும் சுமார் ஆயிரம் கோடி ரூபாய் மதிப்புள்ள தங்கம் கடத்தப்பட்டதால் அந்த அளவுக்கு அந்நியச் செலாவணி நஷ்டம் நாட்டுக்கு! தவிர நியாயமான முறையில் தங்கம் வந்திருந்தால் கிடைக்க வேண்டிய சுங்க வரியும் நஷ்டம்!

தங்கக் கட்டுப்பாடு சட்டம் புகுத்தப்பட்ட போதே உலகத்தின் பொருளாதாரக் கண்ணோட்டம் மாற ஆரம்பித்திருந்தது. அரசிடம் உள்ள தங்கக் கையிருப்பைப் பொறுத்து ஒரு நாட்டின் பணபலம் நிர்ணயிக்கப்படும் வழக்கம் போய், அந்நாட்டின் பொருட்கள் ஏற்றுமதி மூலம் பெறப்படும் அந்நியச் செலாவணியின் மதிப்பைப் பொறுத்து பொருளாதார வளம் கணிக்கப்பட ஆரம்பித்தது. 1974 இல் அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸன், டாலரின் மதிப்புக்கும் தங்கக் கையிருப்புக்கும் இடையேயான தொடர்புதுண்டிக்கப்பட்டதுஎன்று அதிகார பூர்வமாக அறிவிக்க, உலகெங்கும் அதே ரீதியில் பொருளாதார மாற்றங்கள் நிகழ்ந்தன.

உலகளாவிய இந்த மாற்றத்துக்குப் பிறகு, இந்தியாவின் தங்கக் கட்டுப்பாடு சட்டம் மேலும் அர்த்தமற்றதாகிறது. அதனால்தான் மொரார்ஜி தேசாய், ''இதை எப்போதோ நீக்கியிருக்கலாம்'' என்றும் சொன்னார்.

தற்போது ஆட்சிப் பொறுப்பை ஏற்றுள்ள தேசியமுன்னணி அரசு இச்சட்டத்தை நீக்கியதன் மூலம் பொது மக்களும் நகை வியாபாரிகளும் நாணயமாக நடந்து கொள்ள வழி செய்திருக்கிறது.

அயல் நாட்டிலிருந்து வருவோர் சுங்கத் தீர்வை செலுத்தி இம்பதிலிருந்து நூறு கிராம் தங்கம் வரை இந்தியாவுக்குக் கொண்டு வர அனுமதிக்கப்பட வேண்டும் என்றும் நகை வியாபாரிகள் கூறி வருகின்றனர். இதை அனுமதித்தால் கள்ளக் கடத்தலுக்கு மரண அடி கொடுத்ததாகும் என்கின்றனர்.

பாலு ஜுவல்லர்ஸின் அதிபர் பாலு கூறுகிறார்:

''நன்றாக ஞாபகம் இருக்கிறது.... மொரார்ஜி தேசாய் தங்கக் கட்டுப்பாடு சட்டத்தை அறிவித்த சில நாட்களுக்குள்ளாகவே இருபத்திரண்டு காரட் தங்கத்தின் விலை ஒரு பவுனுக்கு 120 ரூபாயிலிருந்து 90 ரூபாயாகக் குறைந்தது! பதினாறு காரட் தங்கமோ துளிக்கூட வரவேற்பு பெறவில்லை. வியாபாரத்தில் தேக்கம். பல பொற்கொல்லர்களும் நகை வியாபாரிகளும் வேலை இழந்தனர். தற்கொலை செய்துகொண்ட பொற்கொல்லர்களின் பரிதாபக் கதைகள் செய்தித் தாள்களிலும் பத்திரிகைகளிலும் நிறைய வெளியாயின. தங்க வியாபாரத்தின் இருண்ட காலம் அது.

''மொரார்ஜி தேசாய்க்குப் பிறகு நிதி மந்திரியான டி. டி. கே., பழையபடி இருபத்திரண்டு காரட் தங்கத்திலேயே நகை செய்யலாம் என்று அறிவித்தபோது வியாபாரம் மீண்டும் சுறுசுறுப்பு அடைந்தது.

'''78 இல் ஜனதா அரசாங்கம் தங்க ஏலத் திட்டத்தைப் புகுத்தியது. இதுவும் தோல்வியே அடைந்தது. கட்டுப்பாடு காரணமாகத் தங்கத்தின் விலை ஏறிக் கொண்டேதான் வந்திருக்கிறது. கள்ளக் கடத்தலும் குறையவில்லை. எங்களைப் போன்ற நகை வியாபாரிகளுக்கு நடைமுறை சிக்கல்களையும் தொல்லைகளையும் அளித்ததைத் தவிர வேறு எதையும் சாதிக்காத இச் சட்டத்தை நீக்கியதற்காக தண்டவதேக்கு 'ரொம்ப தாங்க்ஸ்'.

''இப்போது தங்கம் விலை குறைந்துள்ளது; எனவே பொது மக்களும் எங்களுடன் சேர்ந்து 'தாங்க்ஸ்' கூறுவார்கள்.''

— மௌலி

படம்: யோகா

---

கோவில் யானையைக் கூட பாகன் எப்படிப் பழக்கி ''டிப்ஸ்'' வாங்க வைக்கிறார் என்பதை மதுரையில் கண்டேன்.

மேலமாசி வீதி வழியாக வந்து கொண்டிருந்த போது கோவிலைச் சேர்ந்த யானை ஒன்று டிரைவர் இல்லாது நின்று கொண்டிருந்த லாரியின் 'ஹாரனை' தும்பிக்கையினால் தொடர்ந்து அழுத்தி, பெரிதாக ஒலி எழுப்பிக் கொண்டிருந்தது. பக்கத்துக் கடையில் டீ சாப்பிட்டுக் கொண்டிருந்த லாரி ஓட்டி அலறி அடித்துக் கொண்டு ஓடி வந்தார். யானை அவரிடம் (துதிக்)கையை நீட்ட, அவர் 50 பைசா வைத்தார். அதை வாங்க மறுத்து விட்டது! ஒரு முழு ரூபாய் கொடுத்த பிறகுதான் ஆளை விட்டது!

— ''விருதைமணி''



# ஒரு போஸ்ட் கார்டு போதும்!....






உங்களுக்கும் உங்களது முன்னேற்றத் திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடை யாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண் டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை யின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

---

NAGA


கருணாநிதி
எந்தப்
போட்டாலும்
வெளுக்க
மாட்டேங்குதே ?
பாண்டிச்சேரி
சட்டமன்றத்
தலைவர்
தேர்தல்
தில்லு
முல்லு






அஜித்சிங்கிற்குப் பதில்
சின்ஹா
நியமனம்


ராஜினாமாக் காரணங்கள்
ராஜினாமா வாபஸ்
கட்சிப்
பதவியிலிருந்து
அஜித்சிங்
நீக்கம்


மேய்ப்பான்
சரியா
இல்லைன்னா
பசுமாடு கூட
உதைக்குது
பாரு !
இதர
காங்கிரஸ்
ஆட்சிகள்
மகாராஷ்டிரா
ஆந்திரா
கர்நாடகா
கோவா
மேகாலயா
ராஜீவ்



# கல்கி

1990 ஏப்ரல் 8
மலர்: 48 இதழ்: 36
சுக்ல பங்குனி 26



## பாண்டிச்சேரியில் நடந்த கேலிக் கூத்து!

**பா**ண்டிச்சேரி சட்டமன்றத் தலைவரைத் தேர்ந்தெடுத்த முறையில் ஜனநாயக மரபுகள் குழிதோண்டிப் புதைக்கப்பட்டுள்ளன. சூது வாது, தந்திரங்களே வெற்றி பெற்றுள்ளன. இந்த அசிங்க நாடகத்தில், சட்டமன்ற ஜனநாயகத்தையும் சபாநாயகர் பதவியையும் மட்டுமின்றி, ஆளுனர் பதவியையும் சாக்கடையிலே முக்கி எடுத்த பெருமையை, தி. மு. க. — ஜனதா தளக் கூட்டணி, இ. காங்கிரஸ் கட்சி ஆகிய இரண்டுமே பகிர்ந்து கொள்கின்றன.

ஆளும் கூட்டணிக்கு மெஜாரிடி பலம் மிகவும் குறைவாக இருப்பதால் (16—14), சபாநாயகர் தேர்தலின் போதே போட்டியை உருவாக்கி, ஆளும் கூட்டணி சார்பில் போட்டியிடுகிறவரைத் தோல்வியுறச் செய்து, அதன் மூலம் ஆட்சியையும் கவிழ்த்து விடலாம் என்று காங்கிரஸ் திட்டம் தீட்டியது.

இந்தத் திட்டத்தைத் தி. மு. க. கூட்டணி புரிந்து கொண்டு, நியமன உறுப்பினர்களின் தயவு இன்றி ஆட்சியைத் தொடர முடியாது என்பதை உணர்ந்து, ஆளுனரைக் கொண்டு அவசரம் அவசரமாக நியமன உறுப்பினர்களுக்குப் பதவிப் பிரமாணம் நடத்தியது. எம். எல். ஏக்கள் சட்டமன்றத்தில் பதவிப் பிரமாணம் எடுக்கும் போதே நியமன உறுப்பினர்களின் பதவிப் பிரமாணமும் ஆளுனர் மாளிகையில் நடந்திருக்கிறது!

தாற்காலிக சபாநாயகராக அமர்ந்த காங்கிரஸ்காரர், இந்த நியமன அங்கத்தினர்கள் அவைக்குள் நுழைவதைப் பார்த்ததும் தங்கள் திட்டம் பலிக்காது என்பதைப் புரிந்து கொண்டு, இந்த நியமன அங்கத்தினர்களின் நியமனமே செல்லாது என்று அறிவித்து, அதற்காக ஏதோ காரணங்களையும் கூறியதுடன், சட்டசபையையும் ஒத்தி வைத்து விட்டு இடத்தைக் காலி பண்ணிவிட்டுப் போய்விட்டார்!

இதனால் தி. மு. க. கூட்டணி அசந்து போய்விடவில்லை! அவரிடத்தில் வேறு ஒரு தாற்காலிக சபாநாயகரை அமர்த்தியது! 'இவர் எப்படி முளைத்தார்?' என்று கேட்டால், 'அதற்குரிய உத்தரவை ஆளுனர் ஏற்கெனவே கையெழுத்திட்டிருக்கிறார்!' என்ற விளக்கம் கிடைத்தது! தி. மு. க. கட்சிக்காரரான இந்த இரண்டாவது தாற்காலிக சபாநாயகர், சபாநாயகர் தேர்தலை நடத்தி வைத்தார். ஒரே சமயத்தில், இரு தாற்காலிக சபாநாயகர்களை ஆளுனர் நியமித்தது எப்படி?

ஆக மொத்தம், ஆளும் கூட்டணி, எதிர்க்கட்சி, ஆளுனர், சபாநாயகர், ஆகிய எல்லோருக்கும் மட்டுமின்றி, ஜனநாயகத்துக்கே தலைகுனிவு ஏற்பட்டிருக்கிறது.

இவ்வாறு சூது வாது அடிப்படையில் அமையும் ஆட்சி எத்தனை காலம் நீடிக்கும்? நீடித்தாலும் மக்களின் நல்லெண்ணத்தைப் பெற்றுச் செல்வாக்குடன் திகழுமா? என்பன சிந்திக்கப்படவில்லை.

ஏற்கெனவே நியமன அங்கத்தினர் முறை சட்டப்படி செல்லாது என்பதாக ஒரு வழக்கு நீதிமன்றத்தில் உள்ளது. அதுவும் தவிர, நியமன உறுப்பினரில் ஒருவர் கூட ஜனதாதளத்தைச் சேர்ந்தவராக இல்லை என்பதால் கூட்டணியில் அதிருப்தியும் விரிசலும் ஏற்பட்டிருக்கிறது. ராஜ்ய சபைக்கு ஜனதா தளத்தைச் சேர்ந்த ஒருவரைக் கூட அனுப்பி வைக்கத் தி. மு. க. வுக்கு மனமில்லை என்ற குற்றச்சாட்டு வேறு. ஜனதா தளக் கட்சிக் கூட்டத்தில் கருணாநிதிக்கு எதிராக முன்பு ஆர்ப்பாட்டம் நடந்ததால், பழிவாங்கும் உணர்வுடன் அவர் நடந்து கொள்வதாகப் பேச்சு. செழியன் ராஜ்ய சபைக்குப் போய் மந்திரியானால் மாறன் செல்வாக்குக் குறைந்துவிடும் என்று கருணாநிதி கருதுவதாக ஒரு வதந்தியும் வளைய வருகிறது. இப்படி மனமுறிவு ஏற்பட்டால் கூட்டணி ஆட்சியில் முறிவு ஏற்பட எத்தனை காலமாகும்!

சூழ்ச்சியைச் சூழ்ச்சியால் வெல்வோம் என்பது போர்த்தந்திரம். யுத்தகளத்தில் அது செல்லுபடியாகும். ஜனநாயகக் களத்தில் அல்ல. இங்கே தர்மமும் நேர்மையும்தான் மக்களிடையே செல்வாக்குப் பெற்றுத் தரும். சூழ்ச்சியால் அடையும் வெற்றி தாற்காலிகமாகத்தான் இருக்கும். நமது அரசியல்வாதிகள் இதை உணராத போது, தாற்காலிக வெற்றிகளுக்கே ஆசைப்படும்போது, ஜனநாயகமே கேலிக் கூத்தாகிறது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஏழாவது இரவு

24

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:













தெளிவுபடுத்த மறுத்து அவனை அழைத்துக் கொண்டு புறப்பட்டார். போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன பின்னரும் விஷயங்களைச் சொல்லாமலேயே கடத்தினார்.

ரமேஷ் தவித்தான். அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்திருந்தது. வசுமதியின் மரணத்தோடு அவனைச் சம்பந்தப்படுத்திவிட முடியாது. அவள் கடலில் நீந்திக் கொண்டிருந்த போது, வெளியே தெரியாமல் நீருக்கடியிலேயே நீந்திப் போய் அவள் கால்களைப் பற்றிக் கீழே இழுத்து வாயையும் மூக்கையும் அழுத்தமாக மூடி மூச்சுத் திணறச் செய்து அவள் வாழ்வை முடித்த அந்த நிகழ்ச்சிக்குச் சாட்சியமே இல்லை. அப்படியிருக்கும் போது...

அரை மணி நேரம் கடந்த போது அவர்கள் காரில் வந்து சேர்ந்தார்கள் — வாசு, ரஞ்சனா, மாலினி.

இன்ஸ்பெக்டர் நிமிர்ந்து உட்கார்ந்தார். சொன்னார்...




இன்ஸ்பெக்டர் விவரித்தார்.

வசுமதியின் மரணத்துக்கு முதலில் அவருக்குக் காரணம் புரியவில்லை. பின்னணி தெரியவில்லை. அடிப்படை நோக்கம் தெரியாத, சாட்சியமே இல்லாத ஒரு மரணத்தை எப்படிக் கொலையென்று முடிவு செய்வது?

போதை மருந்து வினியோகத்தில் ஈடுபட்டிருந்த ரமேஷ், வசுமதியையும் அதற்கு அடிமைப்படுத்த முயன்றான். அத்துடன் அவளுடைய பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்ளவும் முயன்றான். அவனுடைய நோக்கத்துக்கு உட்பட அவள் மறுத்து விட்டதோடு தேவைக்கும் அதிகமாக அவளுக்கு விவரங்கள் தெரிந்து விட்ட போது அவளை முடித்துவிட வேண்டியதாகிவிட்டது.

இந்த விவரங்கள் தெரியாத நிலையில் அவர் திண்டாடிய போதுதான் ரஞ்சனா வந்து சேர்ந்தாள். அது அவரை ஒரு புதிய கோணத்தில் சிந்திக்க வைத்தது. அவளை முயல விட்டுப் பின்னணியில் இருந்தார். அவள் நடவடிக்கைகளைக் கண்காணித்து ஆபத்து ஏற்படக் கூடிய சூழ்நிலைகளில் பாதுகாப்பாகச் செயல்பட்டார்...

அவர் சொல்லி வந்தபோது ரஞ்சனா குறுக்கிட்டாள்.




இன்ஸ்பெக்டர் தொடர்ந்தார்.

விவரங்கள் வெளியே வருவதைத் தடுக்கும் முயற்சிகளில் ஈடுபட்ட ரமேஷ் குழுவினர் ரஞ்சனாவையும், மாலினியையும் முடித்துவிடத் தீர்மானித்தனர். அதன் விளைவுதான் செங்கல்பட்டில் இருவரும் கடத்தப்பட்டது.

பாதுகாப்பு ஏற்பாடாகப் பின்தொடர்ந்து கொண்டிருந்த வாசு அவர்களைக் கண்டுபிடித்து, உள்ளூர் போலீஸ் துணையுடன் காப்பாற்றி, அந்தக் குழுவினரையும் கைது செய்து கொண்டுவர இருபத்து நாலு மணி நேரம் ஆகிவிட்டது.

வசுமதியின் கொலைக்குச் சாட்சியமில்லாவிட்டாலும், போதை மருந்து விவகாரம் சிக்கிவிட்டதால் இனி எல்லாவற்றையும் இணைத்து முடிச்சுப் போடுவது இன்ஸ்பெக்டருக்கு எளிதாகிவிடும்.

ரஞ்சனா கேட்டாள்....



வட்டமேஜை

# எலிக்குப் பயந்து வீட்டைக் கொளுத்துவதா?

* தங்கள் தலையங்கத்தைக் கண்ட போது எனக்கு அண்ணா அவர்கள் முதல்வராயிருந்த போது நடந்த நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்தது. "மைசூரையும் (கர்நாடகம்) கேரளத்தையும் போல் நீங்களும் மது விலக்கை ரத்து செய்வீர்களா?" என்று ஒரு நிருபர் கேட்டதற்கு, "மதுவிலக்குக் கொள்கையில் நான் மயக்கம் கொண்டவன் என்ற கருத்தை மீண்டும் வலியுறுத்த விரும்புகிறேன்" என்று கண்டிப்புடன் சொன்னார் அறிஞர் அண்ணா.

அண்ணாவின் வழி வந்தவர்களோ 'சொன்னதைச் செய்வோம், செய்வதைச் சொல்வோம்' என்று கூறிக் கொண்டு சொல்லாத ஒன்றான மலிவு விலை மதுவை வீதியில் ஆறாய் ஓட விட்டு, தாய்மார்களின் வயிற்றெரிச்சலில் குளிர்காய்வதை நினைத்து யார் தான் வேதனைப்படாமல் இருக்க முடியும்?

இராயபுரம். தக்கோலம் புகாரி.

* இந்தியா முழுவதும் மதுவிலக்கு கொண்டு வந்தால், தமிழகத்திலும் தானாகவே மதுவிலக்கு வந்து விடப் போகிறது. இதற்காகத் தமிழக முதல்வரையும், தமிழக அரசையும் மட்டும் தலையங்கத்தில் சாடுவது சரியல்ல.

திருநெல்வேலி — 2. பாளை. உதயம்.

* கள்ளச் சாராயத்துக்குப் பயந்து, மதுவிலக்கைத் தளர்த்துவது — எலிக்குப் பயந்து வீட்டையே கொளுத்துவது போலத்தான்.

குருசாமிபாளையம். குருநாகராஜன்.

* கமல், ராமராஜன் ரசிகர்களின் உரையாடல் காரசாரமாக இருந்தது. இந்த இரண்டு படங்களில் எது விருது பெற்றாலும் அது நமக்கும், தமிழ்த் திரையுலகுக்கும் பெரிய வெற்றியே ஆகும்!

தச்சநல்லூர். ராஜீவ் பிரியன்.

* 'ரொம்பத்தான் மாறி விட்டது மவி' கட்டுரை படித்தேன். ம. வி. மட்டுமா மாறி விட்டது! 'கல்கி' கூடத்தான் மாறி விட்டது! இல்லையெனில் இரண்டு சினிமா ரசிகர்களின் மோதலுக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து முதல் பக்கத்தில் பிரசுரம் செய்திருக்குமா?

கும்பகோணம். கே. பட்டு.

* வாசுகன் எழுதிய 'சினிமாவுக்கு ஒரு கதை' சிறுகதை படித்தேன். சினிமாவுக்குத் திரைக்கதை திருடும் நடைமுறையை நயமாக விளக்கி, நல்ல முடிவும் தந்திருந்தார். பாராட்டுக்கள்.

புழல். எஸ். செல்லத்தாய் சிவலிங்கம்.

* தற்போது கடத்தல் மன்னர்கள் சிலர் போதைப் பொருளைக் கடத்துவதற்குக் கையாளும் முறைகளைத் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டியிருந்தார் 'சிக்னல்' சிறுகதையில் மதுமனோ...!

சீர்காழி. ஜெயப்ரியா.

* ஜேசுதாஸ் சிறந்த பாடகர் என்று மட்டுமே அறிந்திருந்த நமக்கு அவர் பரந்த பார்வையையும், தெளிந்த சிந்தனையையும் வெளிப்படுத்தி, அவர் மிக உயர்ந்த மனிதர் என்பதைப் புரிய வைத்தது சிறப்புப் பேட்டி.

காட்டூர். எஸ். அருள்மொழி.

* ஜேசுதாஸ் கூறிய, 'குருவாயூர் கோவிலுக்குள் நான் வரக் கூடாது என்று வீட்டுக்காரர் (ஸ்ரீகிருஷ்ணன்) சொல்லவில்லை. வாட்ச்மேன் (ஆலய நிர்வாகம்) தான் சொல்கிறார்" என்ற வார்த்தைகள் வைரம்!

சிட்லபாக்கம். அ. ஷண்முகசுந்தரம்.

* ஜேசுதாஸ் அவர்களின் பேட்டி அடக்கமாக, ஆரவாரம் இல்லாமல், கருத்துச் செறிவுடன், சுவை நயத்துடன் இருந்தது.

செங்கல்பட்டு. த. ஹயக்ரீவன்.

* ஜேசுதாஸ் அவர்களுடன் ம சாப்பிட்டபடி உரையாடுவது போல் அமைந்திருந்தது பேட்டி.

திருச்சி — 4. தாயு. ஆண்டாள்.

* 'படத்துக்கு ஒரு பாட்டாவது கர்நாடக இசையில் இருக்கக் கூடாதா?' என்று ஏக்க முகபாவத்துடன் உள்ள ஜேசுதாஸின் அட்டைப்படம் சூப்பர்!

கும்பகோணம். ரவிகணேஷ்.

* தமிழகத்தில் தி. மு. க. டிக்கெட் கிடைக்காமல் சுயேச்சையாக நின்று வெற்றி பெற்ற "ராணிப்பேட்டை" எம். எல். ஏ. அசேன் அவர்களைப் புறக்கணித்த கலைஞர், புதுவையில் மட்டும் கமலக்கண்ணனைக் கட்டித் தழுவி மந்திரி பதவி கொண்டு ஆரத்தி எடுத்து வரவேற்பது ஏனோ? 'கண்ணனின் இருமை' கலைஞருக்குத் தேவைப்படுவதுதானே காரணம்! 'பதவி' ஆசை யாரையும் விட்டு வைப்பதில்லை!

தேனூர் மேட்டுக்கடை. ஏ. சுல்வரன்.

* வானொலி தமிழ்ச் செய்தித் துறையில் நானும் என் சகாக்களும், பணியாற்றிய போது தொடக்கம், துவக்கம் என்ற இரண்டையும் கையாளத் துவங்கினோம். எங்களுடன் சிறிது காலம் பணியாற்றிய தமிழ் எம். ஏ. பட்டதாரிகள் இருவர், எங்கள் செய்தித் தமிழில் வேறு சில பிழைகளைச் சுட்டிக்காட்டிய போதிலும், துவக்கம், துவக்க உரை, துவங்கியது முதலியவற்றைப் பிழை எனச் சொல்லவில்லை. கோனார் தமிழ்க் கையகராதியில் 'துவக்குதல்' என்ற சொல் உள்ளது. அதற்குக் கொடுத்துள்ள பொருள் தொடங்குதல்.

நண்பர் கிச்சாமி இனி தூங்கத் துவங்கலாம்!

சென்னை — 17. கந்தா.

* துவக்கம் — துவங்குதல் — துவங்கியது முதலியவை தவறானவை. நற்றமிழ் இலக்கிய ஆதாரம் அற்றவை! மிகப் பிற்காலத்துக் "கொச்சைகள்". இது பற்றி பலமுறை — பல வானொலி இயக்குநர்களிடம் சொல்லிச் சொல்லி அலுத்துப் போனேன். வெறுப்புதான் மிஞ்சி நின்றது. செவிடன் காதில் ஊதிய சங்கு ஆகியது.

தொலைக்காட்சி என்பது வானொலியின் தங்கை தானே! இங்கும் கொச்சை தொடர்கிறது!

தொடக்கம் — தொடங்கு — தொடங்குதல் — போன்ற நறுந்தமிழ்ச் சொற்கள் தமிழில் — வழக்கில் உள்ளன. இலக்கியப் பின்னணியும் உண்டு.

கோயம்புத்தூர். புலவர். மணியன்.

# மூக்குத்தி...

"நகை போட்டுக்கொள்ளலாம் என்றால் மூக்கு என்ன, கண்ணிமையைக் கூடக் குத்திக் கொள்வார்கள் இந்தப் பெண்கள்'' என்று கேலி பேசும் ஆசாமியா நீங்கள்?

''மூக்குத்தியா? மடிசஞ்சிப் பழக்கமல்லவா அது.'' என்று முகத்தைச் சுளிப்பவரா நீங்கள்?

.... ஒரு நிமிடம் இப்படி மூக்கை... ஸாரி, ஸாரி — காதைக் கொடுங்கள். அக்குபங்ச்சர் நிபுணர் டாக்டர் பாலசுப்ரமணியன் கூறுவதைக் கேளுங்கள்:

''அக்குபங்ச்சர் சாஸ்திரப்படி மிகக் கடுமையான தலைவலி, தீராத ஜலதோஷம், நுரையீரல் சம்பந்தப்பட்ட பல வியாதிகளுக்கும் சிகிச்சை அளிக்க, மூக்குத்தி அணியப்படும் இடத்தில்தான் (மூக்கு மடலின் மையப் பகுதி) நாங்கள் அழுத்தம் கொடுப்போம். அதே போல அந்தக் காலத்தில் மூக்குத் தண்டின் கீழ் துவாரமிட்டுப் புல்லாக்கு அணிந்து கொள்வார்களே அந்த இடம் இன்னும் முக்கியமானது. DU - 26 என்று நாங்கள் அழைக்கும் அந்தப் புள்ளியில் சிகிச்சை அளித்து நினைவிழந்தவர்களைத் தெளிவிப்போம்.

''ஆக, மூக்கைக் குத்திக் கொள்ளும் பழக்கத்தில் ஏதோ விஞ்ஞான ரீதியான காரணம் இருந்திருக்கக் கூடும் என்று தோன்றுகிறது. ஆனால் சில சமயங்களில், ஓயாத 'சைனஸ்'











# ...இன்றைய ஃபாஷன்

தொல்லையால் அவதிப்படுபவர்கள் மூக்குத்தியைக் கழற்றி விட்டால் அத்தொல்லை நீங்கி விடுவதும் உண்டு. இதற்குத் தங்கம் ஒவ்வாமை காரணமாக இருக்கலாம்'' என்கிறார் இம்மருத்துவர்.

மூக்குத்தி அணிவது மீண்டும் ஃபாஷனாக மாறியிருப்பதைக் குறித்து வயதான பெண்மணிகள் சிலரிடம் பேசினோம். அவர்கள் பழைய நினைவுகளைப் பகிர்ந்து கொண்டார்கள்:

சாதாரணமாகச் சிறுமிகளுக்கு ஏழு வயதில் மூக்குக்குத்துவார்களாம். பொங்கலுக்கு மறுநாளான 'கனு' வன்று தாய் மாமன் வீட்டுக்கு அழைத்துச் சென்று, குழந்தைகளின் சொர்க்கமான பாட்டி மடியில் உட்கார வைத்து, பாட்டியே கதைகள் சொல்லிக் கொண்டே, சாதாரணத் தையல் ஊசியில் கறுப்பு நூலைக் கோர்த்து (திருஷ்டி வராமல் இருக்க!) 'சரக்' கென்று குத்தி விடுவார்களாம். சிலர் ஊசிக்குப் பதிலாகக் கிச்சிலி முள்ளையும் உபயோகிப்பதுண்டாம்.

''இன்ஃபெக்ஷனா? அதெல்லாம் உங்கள் காலம். எங்களுக்கு அதெல்லாம் தெரியவே தெரியாது!'' என்று அடித்துச் சொல்கிறார்கள் சில எழுபது வயதுப் பெண்கள். முதலில் மூக்கின் வலதுபுறம், அந்தப்புண் ஆறியதும் இடதுபுறம், கடைசியாக புல்லாக்குத் துளை என்று மூன்று, நான்கு மாதங்களில் மொத்தக் கதையும் முடிந்து விடும்! பின்பு அத் துளைகளைப் பெரிதாக்க, தென்னந்துடைப்பக் குச்சியோ, வேப்பங் குச்சியோ அணியச் செய்வார்கள்.

அடுத்த தலைமுறை பாட்டிகள் கொஞ்சம் 'மாடர்ன்!' ஜாக்கிரதை உணர்வும் அதிகம். எனவே மூக்குக் குத்தும் வேலையைத் தட்டானிடம் விட்டு விட்டார்கள். தங்க ஊசியால் அவர் குத்திய பிறகு புண் ஆறுவதற்கு அரைக் கீரை, செம்மரம் இவற்றை அரைத்துப் போட்டார்கள். கொஞ்சம் சோம்பலாக இருந்தால் எச்சிலையே தடவிக் கொள்ளச் சொல்வதும் உண்டாம்! முரட்டுத்தாய்மார்கள் அம்மி ஓரங்களில் உப்பும் உறைப்புமாக ஒட்டிக் கொண்டிருக்கும் பாசியைச் சுரண்டி எடுத்து, எரிய, எரியத் தடவுவதும் உண்டாம்!

ஆனால் இப்போது சென்று கொண்டிருப்பது 21 ஆம் நூற்றாண்டை நோக்கி அல்லவா? பிரபல நகைக் கடைகளுக்குச் சென்றால் நொடியில் மூக்கு குத்திவிடுகிறார்கள். உம்மிடி நந்தகோபால் கூறுகிறார்: ''கொகேய்ன் ஸ்பிரே அல்லது களிம்பு உபயோகித்து மூக்குக் குத்த வேண்டிய இடத்தை மரத்துப் போகச் செய்து விடுகிறோம். கூரிய முனையுடன் வந்திருக்கும் ஃபெல்ட் பேனாவினால்சரியான இடத்தைக் குறித்துக் கொண்டு, அணிய இருக்கும் மூக்குத்தியைத் தங்க ஊசியில் பொருத்தி, குத்திய பின் ஊசியை எடுத்து விட்டுத் திருகு போட்டுக் கொள்ள வேண்டியது தான். அநேகமாக எல்லோருக்கும் ஒரு வாரத்தில் புண் ஆறிவிடும். ஆறவில்லையென்றால் நரம்பில் பட்டிருக்கிறது என்று அர்த்தம். அப்போது மூக்குத்தியை எடுத்து, புண்ணை ஆறவிட்டு, பின்பு அந்த இடத்திலிருந்து சற்றுத் தள்ளி மீண்டும் குத்திக் கொள்ள வேண்டும். இப்போது கல்லூரிப் பெண்களுக்கெல்லாம் இந்த மூக்குத்தி மோகம் திரும்பியிருக்கிறது. ஒரு மாதத்துக்குச் சராசரியாகப் பத்துப் பதினைந்து இளம் பெண்களுக்கு எங்கள் கடையிலேயே மூக்கு குத்தி விடுகிறோம்.''

மூக்குத்தி மங்கலச்சின்னம். அம்மன் சிலைக்கு அத்தியாவசிய அலங்காரம். கடலிலே கரை காணாது தவித்த கலங்களுக்கு, கன்யாகுமரி அம்மனின் வைர மூக்குத்தி, சுவர்த்துளை வழியே ஒளிக் கற்றை அனுப்பிக் காத்ததாகக் கதை உண்டு.

எத்தனை கதாசிரியர்களுக்குக் கல்யாணத்தை நிறுத்த, குடும்பத்தில் பிரச்னைப் புயலைக் கிளப்ப வைர பேசரி ஒரு வரப் பிரசாதமாக விளங்கியிருக்கிறது!

இந்தக்கால நவநாகரிக யுவதிகளுக்கோ சூரிதாருக்கும், 'பாப்' வெட்டுக்கும் கூட இயைந்து போகக் கூடியதாக விளங்குகிறது, ஒற்றைவைரம் அல்லது நாலுக்கான சின்னத் தங்கப் பொட்டாக அமைந்த மூக்குத்தி!

— நிர்மலா சக்கரவர்த்தி

படத்தில் மூக்குத்தி அணிந்திருப்பவர்:
உதயராணி லோகநாதன்
வண்ணப்படம், படங்கள்: யோகா.



பகவான் நமக்குக் கொடுப்பதில் கருணை இருக்கிறது. அவர் நமக்குக் கொடுக்க மறுப்பதிலும் கருணை இருக்கிறது!

— கிரீஷ் சந்திரகோஷ்.

— சி. பன்னீர்செல்வம்.

# மணல்வெளி மான்கள்

## 13 வையவன்

"அக்யூஸ்டு யாரு?" வக்கீல் கேட்டார்.

"ஒரு விவசாயி" கௌதம் பதிலளித்தான்.

"சொந்த நிலமா?"

"இல்லே. குத்தகை."

சிறிது மௌனம்.

"நீங்க யாரு?"

"அதே ஊர்க்காரன்."

"சொந்தமா?"

"இல்லே. நண்பன்."

"நீங்க என்ன செய்றீங்க?"

"மெக்கானிக்."

"வி மிஸ்டர்...." அவர் பெயருக்காக இழுத்தார்.

"கௌதம்."

"மிஸ்டர் கௌதம் இன்ஸ்பெக்டர் இது அன்பெய்லபில்னு எப்.ஐ.ஆர். போட்டிருந்தா வழக்கு சிரமமானது. இழுத்தடிக்கும். நீங்க ஒண்ணு செய்யுங்க. இலவச சட்ட உதவி வழங்கறதுக்குன்னே ஒரு யூனிட் இருக்கு. அவங்களை மீட் பண்ணுங்க."

அவர் நாற்காலியிலிருந்து எழுந்து விட்டார்.

"ஸார்..." கௌதமும் எழுந்தான்.

அவர் தன்னை வீணாகத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்கிற மாதிரி களைப்பாகப் பார்த்தார்.

"ஒங்களுக்கு உதவி பண்ற விருப்பம் இருக்கு மிஸ்டர் கௌதம்! ஆனா... ஐ' ஆம் ஸாரி. ஐ ஹாவ் நோ டைம்."

"ஸார், அவன் ஒரு அப்பாவி! அவங்க அம்மா ஒரு பிறவி ஊமை..."

"ச்சொச்சொ" வக்கீல் யாந்திரீகமாக அனுதாபப்பட்டார். இதற்கிடையில் அவர் ஒரு கொட்டாவியைச் சிரமத்தோடு அடக்குவது தென்பட்டது.

"உயிரோடு எரிக்கப்பட்டவனும் இவனும் நெருங்கிய நண்பர்கள் சார். அநியாயமா அவன் பேர்ல வழக்கு."

வக்கீல் கௌதமை ஏற இறங்கப் பார்த்தார். மாட்டுச் சந்தையில் பெறுமானம் பார்க்கப்பட்ட மாடு மாதிரி தன்னை உணர்ந்தான் கௌதம். அவர் பார்வை அவன் கையில் கட்டியிருந்த ரேடோ வாட்சின் மீது ஒரு கணம் நின்று விட்டு நகர்ந்தது.

அவனது சாதாரணமான தோற்றத்திற்கு அந்த வாட்ச் பொருந்தாதது. துபாயிலிருந்து கோபிநாத் அவனுக்காக வாங்கி வந்தது. இங்கே வாங்கினால் மூன்றாயிரம் என்று சொன்னார்கள். அதன் விலை மதிப்பல்ல; அதைத் தனக்காக எங்கோ வாங்கத் தோன்றிய இதய மதிப்புதான் கௌதமுக்கு அதைப் போற்றி வைக்கத் தூண்டியது.

"இங்கே கவனிங்க.. நான் ஒரு காஸ்ட்லி லாயர். எதுக்குக் காலத்தை வீணாக்கறீங்க?" நறுக்கென்று அவனுள் இறங்குவது மாதிரி நேரடியாக விஷயத்திற்கு வந்து விட்டார் வக்கீல்.

"ஒரு மனுஷ உயிர் சட்டத்தை விட காஸ்ட்லி இல்லியா சார்?"

வினயம் விவாதமாவதை அனுமதிக்க இயலாதவர் போல் அவர் கண்களை மூடிக் கொண்டு சொன்னார். "இதெல்லாம் வசனம், மேடைல பேசலாம். சினிமாவிலே கேக்கலாம். ஸாரி தம்பி... யூ நாக்ட் எ ராங் டோர்."

அவர் கண்ணைத் திறந்த போது அவன் கை கூப்பிக் கொண்டிருந்தான் — விடை பெறும் தோரணையில். தட்டிய தவறான கதவின் நிர்த்தாட்சண்ணியம் உணர்த்திய வெகு எளிய லௌகீக உண்மைக்கு நன்றி செலுத்துவது போல்.

அவன் தலைகுனிந்தவாறு மேசை நாற்காலிகளைத் தாண்டி கதவை நெருங்குவதை அவர் பார்த்தார். அந்த நடையிலும், மௌனமான பின்வாங்குதலிலும் இருந்த நேர்மை ஒரு சின்னச் சலனம் உண்டாக்கிற்று.

"நில்லு தம்பி!"

கௌதம் திரும்பினான்.

"இங்கே வாங்க."

வந்தான்.

"உட்காருங்க."

வக்கீலும் மீண்டும் உட்கார்ந்தார்.

"நீங்க ஏன் என்னைத் தேடி வந்தீங்க?"

"நெறைய கேள்விப்பட்டிருக்கேன்."

"எங்கே?"

"எங்க ஊர்ல. இந்த தாலுக்காவிலே. ஏன் நம்ப மாவட்டத்திலேயே கூட..."

வக்கீலின் உதடு இறுகியது. கண்கள் மீண்டும் யோசனையில் மூடின.

"ஃபீஸைப் பத்தியும் சொல்லியிருப்பாங்களே!"

அவன் பதிலளிக்கவில்லை.

"உங்களுக்காக ஒரு சலுகை."

கௌதம் சலனமற்றுப் பார்த்தான்.

"ஆயிரம் ரூபா கொண்டு வாங்க."

கௌதம் மேசை மீது வைக்கப்பட்டிருந்த க்ளாஸ் வெயிட்டைப் பார்த்தான்.

"அப்புறமா நீங்க ஒரு பைசா தர வேண்டாம். இது மர்டர் கேஸ். இதுக்கெல்லாம் என் பீஸ் வேற. யூ வில் பி சர்ப்ரைஸ்ட். போகட்டும். இப்ப உங்ககிட்டே கேட்ட ஆயிரம் கூட நாமினல்தான்."

கௌதம் அவரை எடை போட்டுக் கொண்டிருந்தான். ஏன் இவர் போனவனைத் திரும்ப அழைத்தார்?

''இந்த ஆயிரம் ரூபாய் வாங்கறது என்னைப் பொறுத்தவரை ஏறக்குறைய இலவசம் தான்!''

இந்த விலை பேசல், இலவசம் எதுவுமில்லாமல் ஒரு வழக்கை வழக்காக அணுக முடியாதா? கற்றுக் குட்டித்தனமாகத் தான் யோசிப்பதாகக் கௌதம் நினைத்தான்.

ஆயிரம் ரூபாய் பெரிய தொகைதான்! வக்கீலுக்கு அல்ல; தனக்கு. கையிருப்பு நூற்றுச் சொச்சம். மங்கலட்சுமியிடம் அவ்வளவு கூடத் தேறாது. சவுந்தரம்மாளிடம் கிடைக்கும். கேட்டால் போதும்.

கேட்கக் கூடாது. இதுவரை அவன் அங்கே கேட்டதில்லை. இது வேறு விவகாரம். அவனுக்கும் ஆதிக்குமானது. பல வருடங்களுக்கு முன் காலமான தன் தாயின் நினைவு கிளறி விடும் ஆறாத் துயர்களுக்கு, எங்கெங்கோ, எந்தெந்தத் தாய்களிடமோ எதிர் அதிர்வுகள் காணும் விவகாரம்.

நிராதரவின் பாலை மணல்வெளியில் வேட்டை விலங்குகளின் ரத்த தாகத்திற்குத் தப்பி ஓடும் தாயும் குட்டியுமான பேதை மான்களின் விவகாரம். புதை மணலும் கானல் மயக்கமும் இல்லை. இது எனக்காக நான் தனியே சந்திக்க வேண்டியது.

''சரி வர்றேன் சார்! ரெண்டு மூணு மணி நேரத்திலே வர்றேன்.''

வெளி வரும்போது வக்கீலின் மீது ஆத்திரமில்லை. ஏன், மரியாதையே கூட வந்தது. வெளிப்படையாகச் சொன்னாரே மனிதர்!

ஆயிரம் ரூபாய்.

அவன் சட்டைப் பைக்குச் சென்ற இடது கை நின்றது. துபாய் வாட்ச்! மூன்றாயிரம் அன்றைய மதிப்பு. இன்றைக்கு? அவன் நேரே லாங்பஜாருக்கு நடந்தான். அங்கே அந்நிய நாட்டு கடிகாரம் விற்கும் கடை தெரியும்.

உச்சி வெயிலுக்குத் தயங்கியோ என்னமோ கடையில் கூட்டமில்லை.

வாட்ச்சைக் கழற்றி நீட்டினான்.

''என்ன ரிப்பேர்?''

''ரிப்பேர் இல்லே. விக்கணும்.''

கடைக்காரர் ஏற இறங்கப் பார்த்தார்.

''பழைய வாட்ச் வாங்கறதில்லே.''

''பழசு இல்லே. புதுசு. ஃபாரின் — ரேடோ.''

அவர் வாட்ச்சை வாங்கிப் பார்த்தார்.

''சலாம், இஸ்கோ தேகோ...'' என்று ஒரு கண்ணாடிக் கூட்டுக்குள் லைட் போட்டு வலது கண்ணில் லென்ஸ் கூடு இடுக்கிப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவனிடம் நீட்டினார்.

வாங்கியவன் முன்னும் பின்னும் திருப்பிப் பார்த்து விட்டு, கேஸைக் கழற்றினான்.

கௌதம் அவனைக் கவனித்தான்.

யாரோ ஒரு நன் கடைப்படியேறி உள்ளே வந்தாள்.

கடைக்காரர் குட்மார்னிங் சொன்னார்.

''வாட்ச் ரெடியா?''

கன்யா ஸ்த்ரீ உடையைக் கண்டு அவள் நிற்க இடம் விட்டு நகர்ந்தான் கௌதம்.

''நாலு மணிக்கு வந்துடுங்கோ ஸிஸ்டர்!''

''ஐயய்யோ... நான் ஆறு மணிக்கு மெட்ராஸிலே இருக்கணுமே! நீங்க டிலே பண்ணுவிங்கன்னுதான் நேத்து ஈவினிங் வராம ஒரு நாள் தள்ளி வந்தேன்.''

இது எங்கோ கேட்ட குரல். இந்த இங்கிதம். மனசு பூப் பூத்த மென்மை. திரும்பினான். பிலோமினா! அவளும் திரும்பினாள். நம்ப முடியாதது. அதீதமான சினிமாத் திருப்பங்கள் போன்றது. அந்த வெள்ளை உடை. நீலக்கோடுகளிட்ட முக்காடு. சற்றே வாட்டம் கண்ட முகம். ஒரு மான் மருட்சியும் பிரியத்தின் பன்னீர் ஈரமும் நீங்கிய பார்வை.

''கௌதம்?'' என்று விசாரிக்கிற மாதிரி கேட்டாள். வாஞ்சையான புன்னகை.

இது பிலோமினாதான். எனினும் அந்தக் கண் ஒளி!

''பிலோமினா?''

''ஸிஸ்டர் பிலோமினா.''

கடைக்காரர் இருவரையும் பார்த்தார்.

கௌதம் சூழ்நிலையின் இயல்புக்கு வேக வேகமாக மீண்டு வந்தான்.

''எங்கே ஸிஸ்டர் இப்படி?''

''ஒரு வாட்ச் ரிப்பேருக்குக் குடுத்திருந்தேன்.''

மீண்டும் ஸிஸ்டர் பிலோமினா புன்னகை செய்தாள். இப்போது அந்தக் கண்களின் ஒளிக்கு விவரம் புலப்பட்டது. நிம்மதி பத்திரம். ஓர் ஒப்படைப்பு. தெளிவு. சாந்தம்.

''டீக் ஹை... நயா'' என்று அவன் வாட்ச்சைப் பரிசோதிக்கிறவன் சொன்னான்.

கடைக்காரர் அவனிடமிருந்து வாட்ச்சை வாங்கிக் கொண்டு மீண்டும் ஒருமுறை அதைப் பார்த்தார்.

''ஒரு நிமிஷம் ஸிஸ்டர். அந்தச் சேரில் உட்காருங்க என்று பிலோமினாவிடம் சொல்லி விட்டு, கௌதமிடம் திரும்பினார்.

''எவ்வளவு எதிர்பார்க்கறீங்க?''

பிலோமினா நாற்காலியில் உட்காரவில்லை. கடைக்காரர் கையிலிருந்த வாட்ச்சையும் கௌதமையும் மாறி மாறிப் பார்த்தாள். ஒரு கேள்விக் குறி.

கௌதம் இமை தாழ்த்தித் திரும்பி கடைக்காரனைப் பார்த்தான்.

''எவ்வளவு குடுப்பீங்க?''

அதற்குள் அந்தக் கடையிலிருந்த போன்

மணி அடித்தது.

''ஹலோ'' என்று போனை எடுத்துக் கடைக்காரர் பேச ஆரம்பித்தார்.

''என்ன கௌதம்?'' என்று சுருக்கமாக விஷயத்தைத் தொட்டாள் சிஸ்டர் பிலோமினா.

''ஒரு அவசரம்.''

கடைக்காரர் பின்னாலிருந்த காலண்டர் பார்த்துத் திரும்பி, தேதி புரட்டி, ஏதோ விவரம் பேசினார் போனில்.

''அதிர்ச்சியா இருக்கு.'' — சிஸ்டர் சொன்னாள்.

''எனக்கும்தான்.''

''அவ்வளவு நெருக்கடியா?''

புன்னகையாகப் பெருமூச்சு விட்டான் கௌதம்.

''சரி வச்சிடறேன்!'' போனை வைத்து விட்டார் கடைக்காரர். மீண்டும் சொல்லுங்க சார்'' என்று பேரம் துவங்கினார்.

''நீங்கதான் சொல்லணும்.''

''ஆயிரத்தி இருநூறு.''

''ரொம்ப கம்மியாச் சொல்றீங்க.''

''சரி... இருநூத்தி பத்து.''

''நானூறு?''

''அவ்வளவு தானாது. இருநூத்தம்பது கடைசி விலை.''

பிலோமினா குறுக்கிட்டாள்.

''வாட்ச்சை நான் பார்க்கலாமா?''

''இந்தாங்க சிஸ்டர்.''

அவள் வாங்கி ஒருமுறை பார்த்து விட்டு, கையில் வைத்திருந்த ஹாண்ட்பாக்கைத் திறந்தாள்.

''நான் குடுக்கறேன் கௌதம்.''

கடைக்காரர் முகத்தில் பேரம் கை நழுவிய ஏமாற்றம்.

''உங்களுக்கு ஆட்சேபணை உண்டா?'' என்று பிலோமினா கடைக்காரரைக் கேட்டாள்.

''எனக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லே சிஸ்டர். இவரும் உங்களுக்குத் தெரிஞ்ச மனுஷர்''

ஆனால் கௌதமுக்கு ஆட்சேபணை வந்தது. பிலோமினா வாட்ச் வாங்க வரவில்லை. அவனுக்கு உதவி புரிய முன் வருகிறாள். அவன் ஏற்க விரும்பவில்லை. சங்கடப்பட்டான்.

''சிஸ்டர்.. அவரே குடுத்துடட்டுமே. நீங்க குடுங்க பாய். இருநூத்தம்பதே போதும்.''

ஹாண்ட் பாகிற்குள் வாட்சைப் போடப் போன கையை நிறுத்தி வருத்தமாகப் பார்த்தாள் பிலோமினா.

''சிஸ்டரம்மாதான் எடுத்துக்கறேன்னு சொல்றாங்களே சார்!''

உனக்கு உதவும் வாய்ப்பை எனக்கு வழங்க மாட்டாயா என்ற வேண்டுகோள் அவன் பார்வையில் தென்பட்டது. அவன் நெகிழ்ந்தான்.

''சரி.''



அவள் நன்றி கூறுவது போல் அவனைப் பார்த்து விட்டு வாட்ச்சை 'ஹேண்ட் பேக்' இல் போட்டாள்.

''ஒங்க வாட்ச்சை மூணு மணிக்குக் குடுத்துடறேன் சிஸ்டரம்மா!''

''சரி.. மூணு மணிக்கு நிச்சயம் வருவேன்.'' சிஸ்டர் பிலோமினா கௌதம் பக்கம் திரும்பினாள்.

''பணம் இங்கேயே வேணுமா?''

அவன் பதில் சொல்லவில்லை.

''வில் யூ ப்ளீஸ் கம் டு தி கான்வென்ட்?''

''வர்றேனே.''

**வே**கா வெயிலை லட்சியம் செய்யாமல் விறுவிறுவென்று நடந்தாள் சிஸ்டர் பிலோமினா. அந்த நடைக்கு ஈடுகட்ட கௌதம் லேசாக ஓட வேண்டியிருந்தது.

இவள் பழைய பிலோமினா இல்லை. நடையில் ஒரு தீர்க்கம். சலனம் அகன்று திசை தெளிவான ஒரு நிச்சயம்.

''டவுன் பஸ்ல போவோமே!'' வெயிலில் அவள் நடக்க வேண்டாம் என்று அவன் பரிவு காட்டினான்.

''ஏன் ஒங்களுக்குக் கால் வலிக்கிறதா?''

''வெயில்...''

''இட்டேதானே. நடந்துடலாம். பேசிட்டே நடக்கலாம் இல்லியா?''

அவள் பேச விரும்புகிறாள். நான் கூடத்தான். என்னென்ன நடந்து விட்டது!

''ஓ எஸ்.''

''வேலை கிடைக்கலியா கௌதம்?''

''வாட்ச்சை விக்கிறேன்னு பார்க்கறீங்களா?''

அவள் மனம் நொந்தது போல் திரும்பிப் பார்த்தாள்.

''வேலை செய்யறேனே — பம்ப் ஷெட் மெக்கானிக்.''

''ஈஸிட்...? சந்தோஷம்.''

''நிஜமாவே சந்தோஷப்படறீங்களா?''

''அது ஒரு வேலை இல்லியா என்ன? ஏன் வருத்தப்படணும். ஆர் யூ அன்ஹாப்பி?''

''இல்லே!'' — பிலோமினா மாறியிருப்பது மீண்டும் ஊர்ஜிதமாயிற்று.

''டென்னிஸ்?''

''நேரமில்லே. பார்ட்னர்ஸ் இல்லே.''

''எங்கே இருக்கீங்க?''

''விட்டலாபுரம்.''

அவள் நின்று விட்டாள். இன்ஸ்பெக்டர் இருதயராஜ் இதுவரை அவளைச் சந்திக்கவில்லையா? சொல்லவில்லையா?

''அங்கே...?'' அவள் ஆச்சரியத்தோடு நிறுத்தினாள்.

''உங்க அண்ணாதான் இன்ஸ்பெக்டர்.''

''அவரைச் சந்திச்சீங்களா?''

''நேத்து கூட.''

''அவருக்கு நீங்க யார்னு தெரியுமா?''

''ஏன் தெரியாம... வீட்டிலே போட்டோ மாட்டி வச்சிருந்தது. உங்களைக் காட்டி அடையாளம் சொன்னார். நான் எக்ஸ்டென்ஷன்லே படிச்சது; ஸ்டேட் டென்னிஸ் ஆடியது எல்லாம் சொன்னார்...''

வெயில் தெரியாமல் பேசிக் கொண்டே கீான்வெண்டுக்குப் போய் விட்டனர். கௌதம் வெளியில் நின்றான். பிலோமினா உள்ளே போய், பணமும் வாட்சும் எடுத்து வந்தாள்.

பணத்தை மட்டும் வாங்கிக் கொண்டான்.

''வாட்ச் இந்தாங்க.''

''சிஸ்டர் இதை நீங்க வாங்கிட்டுங்க.''

''இது எனக்குத் தேவை இல்லியே. ஜென்ட்ஸ் வாட்ச்.''

''யாருக்காவது பிரெஸண்ட் பண்ணுங்க.''

அவள் ஒன்றும் சொல்லாமல் நீட்டிய கையை மடக்கிக் கொண்டாள். இருவரும் கேட்டுக் கொள்ள நிறையக் கேள்விகள் இருந்தன. முக்கியமாக அவனுக்கு.

நீ ஏன் இப்படி ஆனாய் பிலோமினா? அவன் கேட்க விரும்பவில்லை. இனி அது ஒழுங்கீனம். அவள் ஏதேனும் கேட்க நினைத்திருக்கலாம். தவிர்த்தாள். அவன் புரிந்து கொண்டான். இனி அது அநாவசியம்.

அவன் வணக்கம் தெரிவித்தான். அவள் சிலுவை தரித்துக் கொண்டாள்.

அவன் வக்கீல் அலுவலகத்தின் மாடிப் படி ஏறும் போது மனம் பெரிதாய்க் கனத்திருப்பதை உணர்ந்தான்.

ஐந்து நிமிஷத்தில் வக்கீல் குமாஸ்தா வந்தார்.

''ஐயா கோர்ட்ல இருக்காரு.''

வெயிலில் மீண்டும் இறங்கி, நெடுநடை நடந்தான். வக்கீலிடம் பணத்தை நீட்டும் போது அவர் முகத்தில் வியப்புக் குறி.

''மணி என்ன ஆச்சு?'' என்று அவனைக் கேட்டார்.

பழக்க வாசனையால் இடது கை மணிக்கட்டைத் திருப்பி நாக்கைக் கடித்து, பக்கத்தில் நின்றவர் கடிகாரம் பார்த்து மணி சொன்னான்.

வக்கீல் ஏதோ புரிந்து கொண்டார். அவர் முகம் ஏனோ மாறியது. ஒரு கூடுதல் மரியாதை.

''கோர்ட் கலையற நேரம். நாளைக்குக் காலைல வந்துடறீங்களா? பெய்ல் மூவ் பண்ணணும்னா செஷன்ஸ் ஜட்ஜ்தான். லேட் ஆகும்'' என்றார்.

(தொடரும்)

# அம்மன் நகை

சு. ரவிச்சந்திரன்

"ஆஹா... அம்மனின் முகத்தில் என்ன ஒரு சாந்தம். புன்சிரிப்பு. தாயே... எல்லாரையும் காப்பாத்துடி அம்மா.... பாருங்க என்ன ஒரு களை..." சுபத்ரா பரவசத்தோடு சொன்னாள்....

சிவராமன் பொறுமையின்றிக் கால் மாற்றி நின்றான். ஆங்காங்கு சுவரில் எண்ணெய்த் தீற்றல்கள்... உண்டியல் மீது கொட்டப்பட்ட உபரி குங்குமம்... பொறுமையோ, ஒழுங்கோ இல்லாத ஜனங்கள்.. குங்குமம் கொட்டவென்று தனிக்கிண்ணங்கள் ஆணி அடித்து மாட்டியிருந்தாலும், டக்கென்று கிடைத்த இடத்தில் கொட்டி விட்டுப் போய் விடுகிறார்கள்... கோயிலுக்கு எதற்கு வருகிறார்கள்... எங்கும் அவசரம் எதற்கும் அவசரம்... சினிமா தியேட்டருக்குள் விறு விறுவென்று போவது.. மூன்று மணி நேரம் படம் பார்க்கும் போது இருக்கும் பொறுமை, முடியும் போது அந்தப் பத்து நிமிடத்தில் இருப்பதில்லை. திபுதிபுவென்று ஒருவரையொருவர் முட்டிக் கொண்டு.....

சிவராமன் சிரித்துக் கொண்டான். நாம் என்ன வாழ்ந்தோம்.. இவள் நச்சரிப்பில் வந்தோம். எப்போது முடியும் என்றுதானே இருக்கிறது. விட்டவுடன் முதலில் வீடு போய்ச் சேர்வதில்தானே குறியாக இருப்போம்... அவரவர் அவசரம் அவரவருக்கு..

"என்ன யோசனை? அங்கே பாருங்கள். அடுத்தது தேன் அபிஷேகம்..." மூன்றாம் பேர் அறியாமல் கிசுகிசுத்தாள் சுபத்ரா...

ஒரு முறை இவன் டூரிலிருந்து திரும்பிய போது வாங்கி வந்த தேன்பாட்டில் நினைவு வந்தது.... விலை மலிவோ மலிவு...

வீட்டில் பாட்டில் வந்து இறங்கியதும் சுபத்ரா ஒரு ஸ்பூன் தேனைச் சுவை பார்த்தாள். தலையில் அடித்துக் கொண்டாள்..

'ஏன் இதுக்கென்ன... ஃபர்ஸ்ட் க்ளாஸ் க்வாலிடி... கெடைக்கவே கெடைக்காது.'

'கஷ்டகாலம்... இந்தச் சர்க்கரைப் பாகை இவ்வளவு மெனக்கெட்டு வாங்கி வராவிட்டால் என்ன.. தண்டம் தண்டம் காசு தண்டம்.'

அது சரி; இப்போது அம்பாளின் மீது ஊர்வது தேனா, சர்க்கரைப் பாகா... மளிகைக்கடை ரோக்காவில் ஒரு பாட்டில் தேன் அவ்வளவுதான் தெரியும். அது தேன் தான். அரைகுறையான நம்பிக்கை இறை ஈடுபாட்டைக் குலைக்கும்...

ஜலென்று ஒரு கூச்சல். யாரோ பெண் ஆட ஆரம்பித்தாள். அவளை ஆசுவாசப் படுத்த நான்கு பேர் வேண்டியிருந்தது..

"என்னங்க.... அந்தம்மா மேலே அம்மன் இறங்கியிருக்கு...."

"அப்போ.... இங்கேயிருக்கறது...?" என்று விக்கிரகத்தைக் காட்டிக் கேட்க வேண்டும் போல் இருந்தது. கட்டுப்படுத்திக் கொண்டான்.

மீண்டும் தண்ணீர் அம்பாளைத் தடவிக் கொண்டு போனது...

மஞ்சள் கரைந்து அம்பாள் ஒரு கணம் மஞ்சளாகவே ஆனாள்... பார்க்க நன்றாகத்தான் இருந்தது.

இதுபோல் ஒரு முறை சுபத்ரா ஒரு வெள்ளிக்கிழமையும் அதுவுமாய் மஞ்சள் பூசிக் கிழங்கு போல் வந்தாள்.

'என்ன இது... மஞ்ச மஞ்சேர்னு. பாக்கவே பயமாயிருக்கு... ரெண்டு கிழங்காவது ஆகியிருக்குமா...?'

'ஏங்க. எனக்கென்ன கொறைச்சல். அம்பாள் மாதிரி இருக்கேனாம். எதிர் வீட்டு அம்மா சொன்னாங்க...'

'அப்ப நான் என்ன ராட்சசனா இல்லே பூசாரியா...'

'ம்க்கும்...' அட என்னமாய் ஒரு வெட்டு வெட்டுகிறாள்..

'டாமே....' என்று முழங்காலில் மோதிய மகனின் முகத்திலும் ஒரு 'கோட்' அடிக்கப் பட்டிருந்தது. இந்தவரை நம்மை விட்டாளே!

அர்ச்சனைக்காக நிறையப் பேர் கைகளில் தட்டுகளுடனும் நெஞ்சில் நம்பிக்கையுடனும் நின்றிருந்தனர்....

பால், தயிர் அபிஷேகங்கள் ஆயின... இளநீர் அபிஷேகம் உண்டு... இளநீர் படும் போது விக்ரகம் பளபளத்தது...

கோயிலுக்கு எதிரில் கல்யாண மண்டபம். ஸ்பீக்கர் சங்கீதத்தில் சமீபத்தில் வெளி வந்த சினிமாவின் பாட்டு. 'ஆசை மச்சான் அலைய வச்சான்.'

அபிஷேகத்திற்காகக் கோயிலில் ஒலித்த கொட்டு முழக்குச் சப்தம் ஸ்பீக்கர் சப்தத்தில் தேய்ந்தது... ஒரு கட்டத்தில் சினிமா பாட்டுக்குக் கோயிலின் கொட்டு, ஒத்து வந்தாற் போலிருந்தது....

"ஸ்... பராக்கு பார்க்கவா இங்கு வந்தோம்...!" சுபத்ராவின் சீறலில் மேற்படிச் சப்தங்களிலிருந்து மீண்டான் சிவராமன்...

அவர்களுடைய பெண் அம்மன் மீது வைத்த கண்ணை வாங்காமல் கம்பியைப் பிடித்தபடி நின்றிருந்தாள். பாவம் குழந்தை கால் வலிக்கிறதோ என்னவோ...

திடீரென்று கூட்டம் ஒரு தள்ளு தள்ளியது. ஒரு கணம் சுபத்ரா, சிவராமன்,



பெண் மூவரும் நெரிசலில் தனிப்படுத்தப் பட்டனர்....

பின்னால் தள்ளிய ஆளை முறைத்துப் பார்க்கும் யோசனையை விட்டு விட்டான் சிவராமன். முறுக்கு மீசை, நெற்றியில் அப்பியிருந்த குங்குமம், சன்னமாய் விழிச் சிவப்பு... நட்பாய் ஒரு புன்னகை பூத்தான். அந்த ஆள் அதைக் கண்டு கொள்ளவே இல்லை....

இரண்டு பெண்களுக்கு முன்பு தன் பெண் சிக்கிக் கொண்டதைப் பார்க்கப் பரிதாமாயிற்று.

''சுகன்யா... அம்மாவோட நில்லு...'' அந்தப் பெண்கள் கொஞ்சம் அசைந்ததில் குழந்தை தாயிடம் வந்தாள்.

சந்தன அபிஷேகம்...

இது கொஞ்சம் பார்க்க நன்றாக இருக்கிறது. கூட்டக் கசகசப்பு வியர்வையை வர வழைத்தது. மேலே ஃபேன் கூட இருக்கிறது. போடுவார்களா... சட்டை இன்று ஒரு நாள் கூட வராது.

''தாயே... ஈஸ்வரி....'' படபடவென்று கன்னங்களில் கைகள் மோதும் ஒலி. தீபாராதனையா?

அப்பாடா இன்னும் ஐந்து நிமிடமோ பத்து நிமிடமோ வீட்டில் இன்னுமொரு குளியல் போட்டால்தான் சரிப்படும்.

பிராகாரம் சுற்றுகையில் ''ஏங்க.... பிரமாதமான அபிஷேகம் இல்லே... இன்னி பூரா இங்கேயே இருக்கலாம் போல இருக்கே...''

''இரேன். நான் வேணும்னா போறேன்..''

அவள் பார்வையில் 'அடேய் நாஸ்திகா!'

பூசாரி கொடுத்த பிரசாதங்களைக் கூடையில் அடுக்கி விட்டுக் குழந்தையின் கையைப் பிடித்த போதுதான் அந்த வெறுமை உறைத்திருக்க வேண்டும்...

''அய்யய்யோ! வலதுகை வளையல் எங்கே?''

''சரியாய்ப் பாரு...'' என்றான் சிவராமன். ஒன்றரை பவுன் — கெட்டியாகவே இருக்கும்...

மீண்டும் பிராகாரம் சுற்றினார்கள்...

''இர்ரெஸ்பான்ஸிபிள்..! கூட்டம் வரும்





"பக்கத்துத் தெருவிலே போய்ப் பார்த்தால் நிச்சயம் விடு கிடைக்குங்கறீங்களே, அது ஏன்?"

"அங்கே இரண்டு வயலின் வித்வான், மூணு பாகவதர்கள், குடியிருப்பது தவிர, ஒரு நாட்டியப் பள்ளியும் இருக்கு!"

— சு. ரத்னம்.

பையன்: எந்தச் சானல் போடட்டும்?

பாட்டி: ஆறிலும் சாவு, நாலிலும் சாவு. எதை வேணாப் போடு. எஸ். டி. அரசு

"உன் மனைவி நாகரீகமான புத்திசாலின்னு சொல்றியே எப்படி.....?"

"என்னைத் திட்டும் போது சப்தம் வெளியே கேட்காதபடி மிக்ஸியைப் போட்டுடுவா.....!"

— திருப்பூர்கபி.



இடத்தில் இப்படியா நகையைப் போட்டுக் கூட்டி வருவது. சாமி கும்பிட வந்தால் சாதாரணமாய் வந்தால் போதாதா... இப்படித்தான் ஆகும்.

சுபத்ராவுக்கு ஒரு நிமிடம் நகை தேடும் ஆசை கூட போய் விட்டது. "ஆமாம் இங்கு பத்து சங்கிலி, போடாமல் பாழாய்ப் போகிறது. அதுதான் ஊர்ப்பட்ட நகையைப் போட்டுக் கொண்டு வந்து விட்டேன்!

வார்த்தைகளா அவை! சரியான அஸ்திரம். இவன் வீடு கட்ட அவளுடைய இரண்டு சங்கிலிகள் உதவின இன்றைய தேதிவரை திருப்பிச் செய்து போட இயலவில்லை...

இவர்களுக்கு அடுத்து ஒரு கோஷ்டி அபிஷேகம் பார்த்துக் கொண்டிருந்தது. சுபத்ரா தரையைத் தரையைப் பார்த்ததும் வயதான சுமங்கலி ஒருத்தி "என்னம்மா தேடறே?" என்றாள்.

"குழந்தையோட வளையல்....

அவர்கள் அனைவரும் ஒரு முறை குனிந்து கண்ணால் துழாவினர். உதட்டைப் பிதுக்கி விட்டு மீண்டும் அபிஷேகம் பார்த்தனர்...

"இங்கே வந்து வேண்டுமானால் பாரம்மா..." என்றார் அந்தத் தாத்தா. ப.சுமங்கலியின் கணவனோ?

அவரை 'ப்ச்' என்று அடக்கினாள். ஓர் இளம் பெண்.

கூட்டத்திலிருந்தவர்கள் ஒவ்வொருவராகக் கேட்டனர். ஒரு கட்டத்தில் பதில் சொல்வதைக் கூட நிறுத்தி விட்டாள் சுபத்ரா. பெண்ணின் மீது கோபம் கூட வந்தது. அப்பனை மாதிரியே பெண்., "வாயடிக்கும் போதெல்லாம் இருக்கும் சாமர்த்தியம் ஒரு வளையல் நழுவும் போது இருக்கக் கூடாது?"

"ஒழைச்ச காசுன்னா கெடச்சிரும் பாருங்க." காதில் ஓலைபோட்ட பெண் ஒருத்தி தன் பக்கத்தில் நின்ற இன்னொரு கிழவியிடம் சொன்னாள்...

"தொள தொளன்னா இருந்தது?" இன்னொரு பெண்....

"இல்லை... கையை விட்டு நழுவுவது போலில்லை... ஆனால் சரியாகவும் இல்லை."

"அப்போ கீழே விழுந்திருக்காது. யாராவது உருவியிருப்பாங்க. இந்தக் காலத்துல கோயில்லயும் இந்த மாதிரி ஆட்கள்



# எண்ணிப் பாருங்கள்—இன்னும் பத்து ஆண்டுகளில் இவர்கள் எப்படி இருப்பார்கள் என்று.

நீங்களே பெருமிதப்படக்கூடிய வகையில் ஆரோக்கியத்தின் சின்னமாக இவர்கள் திகழக்கூடும். ஏனெனில் தாய் என்ற முறையில் உங்களால் முடிந்த எல்லாவற்றையும் இவர்களின் ஒளிமயமான எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு நீங்கள் செய்து கொண்டிருக்கின்றீர்கள்.

நீங்கள் காட்டும் அன்பின் முக்கிய அம்சமே இவர்களின் உடல் நலனுக்கு உகந்த ஊட்டச்சத்துகளை முழுமையாகப் பெற்றுத் தருவதுதானே.

ஹார்லிக்ஸ் அளிக்கும் ஊட்டச்சத்து. இவர்களின் வளரும் வயதுக்கேற்ற ஊட்டச் சத்து.



"ஹார்லிக்ஸில் அடங்கியுள்ள முக்கிய ஊட்டச்சத்துகள்— புரோட்டீன்ஸ், விட்டமின்ஸ், மினரல்ஸ் மற்றும் கார்போஹைட்ரேட்ஸ் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும் மிக உகந்தவை.

இதில் சேர்க்கப்பட்டுள்ள கூடுதல் கால்ஷியம் வலுவான பற்களுக்கும், ஆரோக்கியமான எலும்புகளுக்கும் இன்றியமையாதது.

வளரும் குழந்தையின் வயதுக்கேற்ற தெம்பும், முழுமையான ஆரோக்கியமும் அளிக்கவல்லது."




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HTA 6223 TAM



## அருள்வாக்கு

ஆசாரியன் என்பவர் எல்லாவற்றிலும் 'ஸிஸ்டம்' உள்ளவர். அவர் ஏதாவது ஸிஸ்டத்துக்கு (சாஸ்திர சம்பிரதாயத்துக்கு)ப் பிரதிநிதியாக இருக்க வேண்டும். அதன் புஸ்தகங்களை, விஷயங்களை அவர் 'ஸிஸ்டமாடிக்'காகக் கற்றும் கேட்டும் அறிந்திருக்க வேண்டும். இதை மற்றவர்களுக்கும் 'ஸிஸ்டமாடிக்'காக 'டீச்' பண்ணணும். எல்லாவற்றுக்கும் மேலே தாமும் 'ஸிஸ்டமாடிக்'காக வாழ்ந்து காட்ட வேண்டும்.

குருவுக்கு இப்படியெல்லாம் இருந்துதான் ஆக வேண்டும் என்று நிபந்தனை எதுவும் இல்லை. அவர் உள் அனுபவி. அவருடைய அனுபவத்தின் பெருமையாலேயே அவரை மஹான் என்பது. அதன் கனத்தாலேயே குரு என்பது. Character Conduct (சீலம், நடத்தை) என்பதற்கெல்லாம் மேலே போனவர் அவர். பகவானின் காரெக்டர், காண்டக்ட் எப்படி என்று யாராவது பார்ப்போமா? அப்படித்தான் இதுவும். சாஸ்திரத்தைப் பார்த்துப் பண்ண வேண்டும் என்பதும் குருமார்களுக்கு இல்லை. ஆத்மா அல்லது பிரம்மம் என்பதோடு சேர்ந்த ஞானிகளாக அவர்கள் இருப்பார்கள். அல்லது ஈச்வரன், பகவான் என்கிற மஹா சக்தியுடன் 'டச்' உள்ளவர்களாயிருப்பார்கள்; அல்லது மனசை அடக்கி ஸமாதியிலிருக்கிற யோகிகளாக இருப்பார்கள்.

உள்ளே இப்படியிருக்கிறவர்களே வெளியில் ஆசாரியர்களாகவும், வித்வத்துடன் பிரகாசித்துக் கொண்டு, சிஷ்யர்களுக்குப் போதனை பண்ணிக் கொண்டு, தாங்களே சாஸ்திர ப்ரகாரம் காரியங்கள் செய்து கொண்டும் இருக்கலாம். பகவத் பாதாளும் மற்ற மதாசார்யர்களும் இப்படியே குரு, ஆசார்யன் இரண்டுமாக இருந்திருக்கிறார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

வர்றாங்க. நாமதான் சாக்கிரதையா இருக்கணும்...''

''அம்மா... ஒரு வாழைப்பழம் மட்டும்..'' சொல்லி முடிக்குமுன் சுபத்ரா பொத்தென்று ஒன்று வைத்தாள். ''தொலைப்பதெல்லாம் தொலைத்து விட்டுப் பழம் கேட்பதைப் பார்!''

சிவராமனுக்கு ஆத்திரம் வந்தது. சின்னக் குழந்தைக்கு என்ன தெரியும். பெரிய கடா மாடு நீயே ஆன்னு வாயைப் பிளந்து வேடிக்கை பார்த்து விட்டுக் குழந்தையை மொத்தினால்... குழந்தை ஆதரவு தேடி அப்பாவிடம் வந்தது...

மீண்டும் தீபாராதனைப் பரபரப்பு கூட்டத்தில்.. மக்கள் விலக ஆரம்பித்தனர். அந்தத் தாத்தா சட்டென்று பார்வையைக் கூர்மைப் படுத்தினார்... சுட்டிக் காட்டினார். ''அதோ, அந்த கொலாப்ஸிபிள் கேட் கிட்டே என்னன்னு பாரு...''

வளையல் சாதுவாய் கேட் மீது சாய்ந்து கொண்டு இருந்தது. இரண்டு மீட்டர் தூரம் உருண்டு 'ஓடியிருக்கிறது.

''தாயே.. உன் கருணை...'' சுபத்ரா கை கூப்பினாள்.

''நான் சொல்லலே... ஒழைச்ச காசு டக்குன்னு கெடைச்சிடுச்சு...'' அந்தக் காதோலைப பெண் மீண்டும் பக்கத்துக் கிழவியிடம் சொல்லிச் சிரித்தாள். அவள் நகையே கிடைத்தது போல ஒரு மகிழ்ச்சி.

சிவராமனுக்குள் ஒரு சுரீர்.

ஆம். அந்த வளையல்... அவன் தன் பதவியைப் புறம்பாகப் பிரயோகித்து, ஒரு மனிதனுக்கு வளைந்து கொடுத்தற்கான இனாம், பரிசு, அன்பளிப்பு, மாமூல், லஞ்சம், சம்திங் — இவற்றுள் ஏதோ ஒன்று.. அல்லது எல்லாமாகிய ஒன்று...

கடமையை விட வழிபாடு ஒன்றும் கிடையாது. அபிஷேகம் செய்வதனால் மட்டும் உன்னத நிலை வராது. இதை உணர்த்தவே மனைவியின் நச்சரிப்பின் பேரில் தனது வரவு, வளையல் நாடகம் எல்லாமா....

விக்கிரகம், இல்லை... அம்பாள் — பேசாமல் பேசிவிட்டாள்.....

குழந்தையின் கையிலிருந்த இன்னொரு வளையலையும் கழற்றி இரண்டு வளையல்களையும் உண்டியலில் போட்டான். சுபத்ராவுக்குப் பக்தியையும் மீறித் தூக்கி வாரிப் போட்டது. மூன்று பவுன்!

'ஆஹா... அம்பாள் கருணையே கருணை. தனக்கு வேண்டிய பொருளைத் தானே பெற்றுக் கொள்கிறாள்...!' யாரோ வியாக்கியானம் சொன்னார்கள்...

சிவராமன் அம்பாளைப் பார்த்தான். இப்போதுதான் அம்பாளின் முகத்தில் 'நகை' தெரிந்தது.

வீட்டுக்குப் புறப்பட்டான்... கடுகடுப்பை வெளியே காட்டாமல் சுபத்ரா தொடர்ந்தாள்.....

# பொன்னியின் செல்வன்



## அத்தியாயம் 70

## கோட்டைக் காவல்

கோட்டைக்குள் பிரவேசித்த யானையையும் பல்லக்கையும் காலாந்தககண்டர் சிறிது நேரம் மிகக் கவனமாக உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"அதிசயமாயிருக்கிறதே!" என்றார்.

"என்ன அதிசயம்? எது அதிசயம்?" என்று அநிருத்தர் வினாவினார்.

"இளவரசர் மதுராந்தகர் இவ்வளவு ஆர்ப்பாட்டத்துடன் கோட்டைக்குள்ளே போவதுதான்! இளவரசர் மிக்க கூச்சம் உள்ளவராயிற்றே? பல்லக்கின் திரையை விட்டுக் கொண்டு அல்லவா பிரயாணம் செய்வார்?"

"என்றைக்காவது ஒரு நாள் கூச்சம் தெளிந்துதானே ஆக வேண்டும்? சீக்கிரத்தில் முடிசூட்டிக் கொள்ள வேண்டியவராயிற்றே?"

"மதுராந்தகருக்கு முடி சூட்டுவது என்று முடிவு செய்தாகி விட்டதா? யார் முடிவு செய்தார்கள்?"

"ஏன்? சக்கரவர்த்திதான்! நாம் எல்லாருமாகப் போய்ச் சக்கரவர்த்தியிடம் நம் சம்மதம் தெரிவித்ததும்..."

"சக்கரவர்த்தி முடிவு செய்து, நாம் சம்மதம் கொடுத்து என்ன பயன்? கொடும்பாளூர்ப் படைகள் அல்லவா சம்மதம் கொடுக்க வேண்டும்? அவர்கள் காவல் புரியும் கோட்டைக்குள் இளவரசர் மதுராந்தகர் இவ்வளவு குதூகலமாக யானை மேல் ஏறிப் போவது அதிசயந்தான்!" என்றார் காலாந்தக கண்டர்.

யானை சென்ற திசையை நோக்கிச் சில அடிகள் எடுத்து வைத்து விட்டு மறுபடியும் திரும்பி வந்தார்.

பின்னர், பெரிய பழுவேட்டரையரைப் பார்த்து, "அண்ணா! நீங்கள் எல்லாரும் கோட்டைக்குள் செல்வதற்கு நான் குறுக்கே நிற்கவில்லை. ஆனால் நான் மட்டும் வர முடியாது. நேற்று வரை என் கட்டுக் காவலுக்குள் இருந்த கோட்டையில் இன்று நான் பிறருடைய அதிகாரத்துக்கு உட்பட்டுப் பிரவேசிக்க முடியாது. என் மனம் இடங்கொடுக்கவில்லை. நீங்கள் போய்ச்

அமரர் கல்கி

சக்கரவர்த்தியைத் தரிசித்து அவருடைய விருப்பம் என்னவென்று தெரிந்து கொள்ளுங்கள். நான் நம் சைன்யத்துடன் வெளியிலேதான் இருப்பேன். மேலும், வந்தியத்தேவனைத் தேடிக்கொண்டு கந்தமாறன் போயிருக்கிறான். அவன் என்ன செய்தி கொண்டு வருகிறான் என்று அறிய நான் ஆவலாயிருக்கிறேன். வந்தியத்தேவன் எப்படிப் பாதாளச் சிறையிலிருந்து தப்பினான், யாருடைய உதவியினாலே வெளியேறினான் என்று தெரிந்து கொள்ள வேண்டும். என்னை மன்னித்து விட்டு, நீங்கள் எல்லாரும் கோட்டைக்குள் போங்கள்!'' என்றார்.

கொடும்பாளூர் வேளார் ஏதோ சொல்ல வாயெடுத்தார். அதற்குள் பெரிய பழுவேட்டரையர் குறுக்கிட்டு, ''சேநாதிபதி! இந்த மூடனுடைய மூளை கலங்கிப் போயிருக்கிறது. அவன் எக்கேடாவது கெட்டுப் போகட்டும்! நாம் போகலாம், வாருங்கள்!'' என்றார்.



னால் மறுநாள் சக்கரவர்த்தியிடம் இந்த விவரங்கள் எல்லாம் அறிவிக்கப்பட்டபோது அவர் பெரிய பழுவேட்டரையரின் கருத்தை ஒப்புக் கொள்ளவில்லை. காலாந்தக கண்டர் வந்தே ஆக வேண்டும் என்று வற்புறுத்தினார்.

''என் அன்பார்ந்த தளபதிகளே! நீங்கள் எல்லாரும் என் நம்பிக்கைக்கு உகந்தவர்கள். ஆனால் உங்கள் எல்லாரிலும் நான் அதிகமாக நம்பிக்கை வைத்திருந்தது கோட்டைக் காவலர் காலாந்தக கண்டரிடத்திலேதான். அவர் ஏன் வரவில்லை? அவர் வராத வரையில் உங்களையெல்லாம் நான் அழைத்த காரியம் முடிவாகாது!'' என்றார்.

பெரிய பழுவேட்டரையர், ''சக்கரவர்த்தி! மன்னிக்க வேண்டும்! நான் ஒப்புக் கொள்கிற எந்த முடிவையும் என் சகோதரனும் ஒப்புக் கொள்வான்! அவன் நேரில் வந்துதான் ஆக வேண்டுமென்பதில்லை!'' என்றார்.

''தனாதிகாரி! இராமனுக்கு லக்ஷ்மணன் வாய்த்தது போல் தங்களுக்குக் காலாந்தக கண்டர் வாய்த்துள்ளார் என்பதை உலகமெல்லாம் அறிந்திருக்கிறது. ஆனாலும் அவர் ஏன் இங்கு இன்றைக்கு வரவில்லை? இதற்கு முன்னால் இங்கு நான் நடத்தியுள்ள முக்கியமான எல்லா மந்திராலோசனைகளிலும் சின்னப் பழுவேட்டரையர் இருந்திருக்கிறார். அவரைக் கேளாமல் எந்த முடிவும் நாம் செய்ததில்லை. அத்தகைய அறிவிற் சிறந்த வீரர் இப்போது மட்டும் ஏன் வராமலிருக்க வேண்டும்?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

முதன் மந்திரி அநிருத்தர், ''பெருமானே! அதற்கு நான் மறுமொழி சொல்கிறேன். காலாந்தக கண்டர் இன்று குருவுக்கு மிஞ்சிய சீடர் ஆகிவிட்டார்; அண்ணனுக்கு மிஞ்சிய தம்பியும் ஆகிவிட்டார். சக்கரவர்த்தி அழைப்பதாகச் சொல்லியும், வருவதற்கு மறுத்து விட்டார். பெரிய பழுவேட்டரையர் எவ்வளவோ புத்தி கூறியும் அவர் கேட்டுக் கொள்ளவில்லை! கோட்டைக்குள் வருவதற்கு மறுத்து விட்டார்'' என்றார்.

''ஆனால் ஒன்றை மட்டும் மறந்துவிட வேண்டாம்! சக்கரவர்த்தியின் விருப்பத்தையொட்டி நாம் இங்கு செய்யும் எந்த முடிவையும் தாம் ஒப்புக் கொள்வதாகச் சொல்லியிருக்கிறார்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஆனாலும் இங்கு வருவதற்குச் சின்னப் பழுவேட்டரையர் மறுத்ததற்குக் காரணம் என்ன? அவர் மனத்தில் இன்னும் ஏதாவது விபரீத சந்தேகம் தோன்றியிருக்கிறதா?''

''மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்று சொல்வதில்லையா? அவருக்கு இப்போது எது எடுத்தாலும் சந்தேகந்தான்! இங்கே மதுராந்தகர் பத்திரமாயிருக்கிறாரா என்பது பற்றிச் சந்தேகம். வந்தியத்தேவன் பாதாளச் சிறையிலிருந்து தப்பிச் சென்று விட்டது பற்றிச் சந்தேகம்!......''

''காலாந்தக கண்டர் மனத்தில் ஏதேனும் சந்தேகம் உதித்தால் அதற்குக் காரணம் இல்லாமற் போகாது!'' என்று சக்கரவர்த்தி கூறியதும், சிறிது நேரம் அங்கே மௌனம் குடி கொண்டிருந்தது. ஒவ்வொருவர் மனத்திலும் வெவ்வேறு சிந்தனை தோன்றியது.

பெரிய பழுவேட்டரையர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''பெருமானே! என் சகோதரனுடைய சந்தேகத்துக்குக் காரணம் இருக்கலாம்; இல்லாமலும் போகலாம். அவனைப்பற்றி நான் குற்றம் கூறவும் விரும்பவில்லை. ஆனால் அவன் கோட்டைக்குள் வர மறுத்ததற்கு உண்மையான காரணம் என்னவென்பதைச் சொல்லி விடுகிறேன். இந்தத் தஞ்சாவூர்க் கோட்டை வெகு காலமாக அவனுடைய கட்டுக் காவலுக்குள் இருந்ததாம்! இப்போது பெரிய வேளாரின் அதிகாரத்துக்குக் கோட்டைக் காவல் மாறி விட்டதாம்! அதனால் அவன் இக்கோட்டைக்குள் வர முடியாதாம்! அவனுடைய இப்படிப்பட்ட அதிகப்பிரசங்கித்தனத்துக்கு யார்தான் என்ன

செய்ய முடியும்?'' என்றார்.

''ஏன்? நீதி செய்ய முடியும்!'' என்றார் சுந்தர சோழச் சக்கரவர்த்தி.



க்கரவர்த்தி இவ்வாறு கூறியதும் எல்லாரும் மௌனமாயிருந்தார்கள்.

மறுபடியும் சுந்தரசோழர், ''அமைச்சர்களே! சோழ குலத்தின் புகழுக்கெல்லாம் அடிப்படையான காரணம் இந்தக் குலத்து மன்னர்கள் நீதி வழுவாத நெறியில் நின்று வந்ததுதான். என் குலத்து முன்னோர் ஒருவர் தமது அருமைக் குமாரன் கன்றுக் குட்டியின் பேரில் தேரை ஏற்றிக் கொன்றதற்காக அவனுக்கு மரண தண்டனை விதித்த வரலாற்றை நீங்கள் எல்லாரும் அறிவீர்கள். பசுக்களுக்கு நீதி வழங்கியவர்கள் குடிமக்களுக்கு எத்தகைய நீதி வழங்கியிருப்பார்கள்? தங்கள் ஆட்சிக்குத் துணை நின்ற தளபதிகளுக்கு எப்படி நியாயம் வழங்கியிருப்பார்கள்? நான் மட்டும் அந்த மரபுக்கு மாறாக நடந்து சோழ குலத்துக்கு ஏன் களங்கத்தை உண்டாக்க வேண்டும்? சின்னப் பழுவேட்டரையரிடமிருந்து தஞ்சைக் கோட்டைக் காவலைப் பெரிய வேளார் கைப்பற்றியது பெருந் தவறு. என் அருமை மகன் அகால மரணமடைந்த துயரத்தில் மூழ்கியிருந்தபடியால், சின்னப் பழுவேட்டரையருக்கு இழைத்த அநீதியைப் பற்றி நான் சிந்திக்கத் தவறி விட்டேன். சேநாதிபதி! இக் கோட்டைக் காவலை மீண்டும் அவரிடம் மாற்றிக் கொடுத்து விட வேண்டியதுதான்!'' என்றார்.

கொடும்பாளூர் பெரிய வேளாரின் முகத்தில் ஈயாடவில்லை. திருக்கோவலூர் மலையமான் அப்போது முன்வந்து, ''ஐயா! தஞ்சைக் கோட்டைக் காவல், சின்னப் பழுவேட்டரையரிடம் இருந்தபோது, அந்தப் பொறுப்பை அவர் சரியாக நிறைவேற்றியதாகத் தெரியவில்லையே? சதிகாரன் ஒருவன் இந்தக் கோட்டைக்குள் புகுந்து, அரண்மனை அந்தப்புரம் வரைக்கும் வந்து, தங்கள் பேரில் வேல் எறியும்படிக்கும் நேர்ந்து விட்டதே! யாரோ ஒரு ஊமைப் பெண் குறுக்கிட்டுத் தங்கள் உயிரைக் காப்பாற்றும்படி நேர்ந்து விட்டதே! அவள் அச்சமயம் வராவிட்டால் என்ன நடந்திருக்கும்? இந்தத் தஞ்சைக் கோட்டையில் உள்ள ஆயுதச் சாலையில் எண்ணுவதற்கு இயலாத வாள்களும் வேல்களும் ஈட்டிகளும் அடுக்கி வைத்திருந்து என்ன பயன்? இங்கே கோட்டைக் காவலுக்கு என்று இத்தனை வீரர்களும் வேளக்காரப் படையைச் சேர்ந்த வீராதி வீரர்களும் இருந்து என்ன பயன்? தளபதி சின்னப் பழுவேட்டரையர் தமது பொறுப்பைச் சரிவர நிறைவேற்றியதாகச் சொல்ல முடியுமா? அவரிடமிருந்து நம் பெரிய வேளார் கோட்டைக் காவலைக் கைப்பற்றியது எப்படித் தவறாகும்?'' என்று கேட்டார்.

''மாமா! விதியின் கொடுமைக்கு யார் மீது குற்றம் சுமத்தி என்ன செய்வது? தங்கள் அருமைப் பேரன் ஆதித்த கரிகாலனைக் காப்பாற்ற உங்களால் முடிந்ததா? நீங்கள் எல்லாரும் சேர்ந்து எத்தனையோ பிரயத்தனம் செய்தீர்களே?'' என்றார் சக்கரவர்த்தி.

''அதைப் பற்றி விசாரிக்க வேண்டியதும் அவசியந்தான், சக்கரவர்த்தி! கடம்பூர் அரண்மனையில் நேர்ந்த கொடிய சம்பவத்துக்குப் பொறுப்பாளி யார் என்று இன்னும் விசாரணை நடக்கவில்லை. அதைப் பற்றிய உண்மை வெளியாகவும் இல்லை!'' என்றார் மலையமான்.

''பெரிய பழுவேட்டரையரின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தோம். அவர் வந்து விட்டபடியால், இனி விசாரணை ஆரம்பிக்கப்பட வேண்டும்'' என்றார் சேநாதிபதி பெரிய வேளார்.

''விசாரணை ஆரம்பிப்பதற்கு முன்னால், கொலைக் குற்றம் சாட்டப்பட்ட வந்தியத்தேவன் பாதாளச் சிறையிலிருந்து தப்பி ஓடியது எப்படி? அதற்குப் பொறுப்பு யார் என்பதையும் இப்பொழுதே தீர விசாரிக்க வேண்டும்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஆமாம்; அதுவும் கேள்விப்பட்டேன். சேநாதிபதி! வந்தியத் தேவன் பாதாளச் சிறையிலிருந்து தப்பி ஓடியது எப்படி? அதற்கு யார் பொறுப்பு ஏற்பது?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''சக்கரவர்த்தி! அதற்கு மறுமொழி முதன் மந்திரி அநிருத்தர் சொல்ல வேண்டும்!'' என்றார் பெரிய வேளார்.

''பிரபு! அந்தப் பொறுப்பை நானே ஏற்றுக் கொள்கிறேன். வந்தியத் தேவன் தப்பி ஓடியது நான் செய்த ஒரு சிறிய தவறினால்தான். ஆனால் அவனைத் திரும்பக் கொண்டுவந்து ஒப்புவிக்கும் பொறுப்பையும் நானே ஏற்றுக் கொள்கிறேன். அதில் தவறினால் உரிய தண்டனைக்கு உள்ளாகிறேன்'' என்றார் அநிருத்தர்.

''அந்தப் பொறுப்பை முதன் மந்திரிக்கு முன்னால் என் நண்பன் கந்தமாறன் ஏற்றுக் கொண்டு விட்டான்! பாதாளச் சிறையி

லிருந்து தப்பி ஓடியவனைத் துரத்திக் கொண்டு போயிருக்கிறான்!'' என்றான் பார்த்திபேந்திரன்.


ந்தச் சம்பாஷணைகள் எல்லாம் நடந்து கொண்டிருந்த போது அந்த அறையில் பெண்மணிகள் இருவர் அமர்ந்திருந்தனர். அவர்கள் சக்கரவர்த்தினி வானமா தேவியும் இளைய பிராட்டி குந்தவையுந் தான்.

வந்தியத் தேவனைக் கந்தமாறன் துரத்திக் கொண்டு போயிருக்கிறான் என்ற செய்தியைக் கேட்டதும் இளையபிராட்டி குந்தவை தேவியின் முகம் மாறுதல் அடைந்ததை முதன் மந்திரி அநிருத்தர் மட்டுமே கவனித்தார்.

பார்த்திபேந்திரனைப் பார்த்து, ''பல்லவ குமாரா! உன் நண்பன் கந்தமாறன் வெகு கெட்டிக்காரன்தான்! ஆனால் சில காரியங்களில் அவனை நம்புவதில் பயனில்லை. அவனுடைய சொந்தக் கடம்பூர் மாளிகையில் வந்து தங்கியிருந்த சோழ நாட்டின் கண்ணுக்குக் கண்ணான இளவரசர் கரிகாலரை அவனால் காப்பாற்ற முடியவில்லையே? சிறையிலிருந்து தப்பி ஓடிய வந்தியத்தேவனை அவனால் பிடிக்க முடியுமா? எனக்குத் தோன்றவில்லை!'' என்றார் முதன் மந்திரி.

தமது கடைசி வார்த்தைகளில் அடங்கிய குறிப்பைக் குந்தவைப் பிராட்டி தெரிந்து கொண்டாள் என்பதையும் கவனித்துக் கொண்டார்.

''மேலும், கந்தமாறனும் வந்தியத் தேவனும் அத்தியந்த நண்பர்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்!'' என்றார் சேநாதிபதி வேளார்.

''அது பழைய கதை, சக்கரவர்த்தி! சோழ குலத்துக்குத் துரோகம் செய்த யாரும் சம்புவரையர் குலத்துக்குச் சிநேகமாயிருக்க முடியாது!'' என்றார் பெரிய சம்புவரையர்.

''அதைப் பறறி இப்போது என்ன பேச்சு? வந்தியத் தேவனைத் திரும்பக் கொண்டு வந்து ஒப்புவிக்கிற பொறுப்பைத் தான் முதன் மந்திரி அநிருத்தர் ஏற்றுக் கொண்டு விட்டாரே? சேநாதிபதி! தஞ்சைக் கோட்டைக் காவலைத் திரும்பச் சின்னப் பழுவேட்டரையரிடம் ஒப்புவித்து விட வேண்டியதுதான்!'' என்றார் சுந்தர சோழர்.

''சக்கரவர்த்தியின் கட்டளை இது என்றால், நிறைவேற்றி வைக்கச் சித்தமாயிருக்கிறேன்!'' என்றார் சேநாதிபதி பெரிய வேளார். அவருடைய குரலின் தொனியில் அவரது உள்ளத்தில் பொங்கிய கோபம்



வெளியாயிற்று.

''கொடும்பாளூர் மாமா! தாங்கள் என்னை விட வயதிலும் அநுபவத்திலும் எவ்வளவோ மூத்தவர். என் தந்தையைப் போல் தங்களிடம் நான் பக்தி கொண்டவன். தங்களுக்கு நான் கட்டளையிட முடியுமா? என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். இந்த விஷயத்தில் இங்குள்ள மற்றவர்களின் அபிப்பிராயத்தையும் தெரிந்து கொண்டு மேலே செய்ய வேண்டியதைப் பற்றிப் பிறகு கவனிக்கலாமே?'' என்றார் சக்கரவர்த்தி.

''எனக்கு அதில் விருப்பம் இல்லை! சின்னப் பழுவேட்டரையர் தமது கடமையில் தவறி விட்டார்; ஆகையால் அவரிடம் கோட்டைக் காவலைத் திரும்பக் கொடுக்கக் கூடாது!'' என்று கண்டிப்பாகமறுத்துக் கூறினார் திருக்கோவலூர் மலையமான்.

''முதன் மந்திரியின் கருத்து என்ன?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''நடந்தது நடந்து விட்டது. இப்போது கோட்டைக் காவலை மாற்றுவதில் சில கஷ்டங்கள் ஏற்படக் கூடும். இராஜ்ய உரிமை சம்பந்தமாகப் பேசி முடிவு செய்வதற்காக எங்களையெல்லாம் அழைத்திருக்கிறீர்கள். அந்த விஷயம் முடிவான பிறகு இதை எடுத்துக் கொள்ளலாம்'' என்றார் அநிருத்தர்.

''சின்னப் பழுவேட்டரையர் இல்லாமல்



நாம் எந்த முடிவுக்கும் வர முடியாது! தனாதிகாரி! தங்கள் கருத்து என்ன?'' என்று கேட்டார் சுந்தர சோழச் சக்கரவர்த்தி.

''மலையமான் கருத்தை நானும் ஒப்புக்கொள்கிறேன். என் சகோதரன் தன் கடமையில் தவறி விட்டான். பொறுப்பைச் சரிவர நிறைவேற்றவில்லை. ஆகையால் கோட்டைக் காவலை அவனிடம் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை!'' என்றார் பெரிய பழுவேட்டரையர்.

அவருடைய சகோதர வாஞ்சையை அங்கிருந்த எல்லோரும் நன்கு அறிந்தவர்களாதலால் பெரிய பழுவேட்டரையரின் மேற்கூறிய மறுமொழி அனைவருக்கும் வியப்பை உண்டாக்கியது. அதைக் காட்டிலும், சக்கரவர்த்தி தொடர்ந்து கூறியது அதிக வியப்பையும் திகைப்பையுமே உண்டாக்கி விட்டது.

''தனாதிகாரி! சின்னப் பழுவேட்டரையர் அவருடைய கடமையில் தவறவில்லை. நானும் தாங்களுந்தான் அவருடைய வார்த்தையைக் கேட்கத் தவறி விட்டோம். அவர் அவ்வப்போது செய்த எச்சரிக்கைகளையும் நாம் இருவருமே பொருட்படுத்தவில்லை. எல்லாரும் கேளுங்கள்: மதுரை வீர பாண்டியனுடைய ஆபத்துதவிகளைப் பற்றிச் சின்னப் பழுவேட்டரையர் அடிக்கடி எனக்கு எச்சரிக்கை செய்து வந்தார். அவர்கள் இந்தக் கோட்டைக்கு உள்ளேயே தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதாகவும் கூறினார். ஆகையால் என் அரண்மனைக்கும் அந்தப்புரத்துக்கும் கூட இன்னும் கடுமையான காவல் போட வேண்டும் என்று வற்புறுத்தினார். தனாதிகாரியின் அரண்மனைக்கும் என் அரண்மனைக்கும் உள்ள இரகசிய வழிகளை அடைத்து விட வேண்டும் என்றும் வற்புறுத்தினார். பெரிய பழுவேட்டரையரிடம் காலாந்தக கண்டர் எவ்வளவு பக்தி கொண்டவர் என்பது உங்களுக்கெல்லாம் தெரிந்த விஷயமே. ஆயினும் தனாதிகாரி பேரிலேயே அவர் என்னிடம் புகார் சொன்னார். தம் தமையனார் ஏமாற்றப் பட்டு வருவதாகவும், அவர் அரண்மனையிலேயே சதிகாரர்கள் வருவதாகத் தாம் சந்தேகிப்பதாகவும் தெரிவித்தார். பெரிய பழுவேட்டரையரை அவருடைய அரண்மனையிலிருந்து வேறு அரண்மனைக்குப் போகச் சொல்லி விட வேண்டும் என்றும், பொக்கிஷத்தையும் வேறு இடத்துக்கு மாற்றி விட வேண்டும் என்றும் யோசனைகள் கூறினார். அந்த எச்சரிக்கைகளையெல்லாம் நான் செவியில் வாங்கிக் கொள்ளவே இல்லை!....''

இச்சமயம் பெரிய பழுவேட்டரையர்

தமது தொண்டையை ஒரு முறை கனைத்துக் கொண்டார். அதைக் கேட்டுச் சுந்தர சோழர் தம் பேச்சை நிறுத்தினார்.

''சக்கரவர்த்தி! என் பேரில் தங்களுடைய கருணை காரணமாகத் தாங்கள் சொல்லாமல் விட்டதையும் நான் சொல்கிறேன். என்னுடைய அவமானத்தைத் தாங்கள் வெளியிட விரும்ப வில்லை; நானே வெளியிட்டுக் கொள்கிறேன். முதிய பிராயத்தில் நான் மோக வலையில் மூழ்கி மணந்து கொண்ட நந்தினியைப் பற்றி என் சகோதரன் எனக்கு எச்சரிக்கை செய்தான். மந்திரவாதி என்று சொல்லிக் கொண்டு அவளிடம் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளின் தலைவன் வந்து போவதாகவும் எச்சரிக்கை செய்தான். மாய மோகத்தில் மூழ்கி, கண்ணிழந்து குருடனாயிருந்த நான் அதற்குச் செவிசாய்க்க வில்லை. ஆனாலும் அவன் தன் கடமையிலிருந்து தவறியவன் தான்! அவனுக்கு அவ்வளவு நிச்சயமாகத் தெரிந்திருக்கும் போது அவன் அந்தப் பாதகியையும் அவளிடம் வந்து கொண்டிருந்தவர்களையும் கண்டு பிடித்துக் கொன்றிருக்க வேண்டும். நான் தடுத்திருந்தால், தமையன் என்று பாராமல் அவனுடைய கை வாளால் என்னையும் கொன்றிருக்க வேண்டும். அவ்விதம் செய்யத் தவறியது அவன் கடமையைக் கை விட்டதுதானே?'' என்று பெரிய பழுவேட்டரையர் தம் பெரிய குரலில் கூறியதைக் கேட்டவர்களுக்கெல்லாம் மெய் சிலிர்த்தது. அவருடைய வார்த்தைகளில் ததும்பிய சொல்ல முடியாத மனவேதனையை அறிந்து கொண்டு ஒவ்வொருவரும் வேதனைப் பட்டார்கள்.

''தனாதிகாரி! கொஞ்சம் பொறுங்கள்! தங்கள் சகோதரர் சின்னப் பழுவேட்டரையர் கடமையைக் கருதி அவ்வாறு செய்யக் கூடியவர்தான். அதற்கு நானே தடையாக இருந்தேன். தங்களைப் பற்றியாவது தங்கள் இளைய ராணியைப் பற்றியாவது ஏதாவது புகார் சொல்வதாயிருந்தால், என் முகத்திலேயே விழிக்க வேண்டாம் என்று கட்டளையிட்டேன். தங்களுடைய அரண்மனையிலிருந்து தங்களை வேறிடத்துக்கு மாற்றி விட்டு, அங்கே வேளக்காரப் படையைக் கொண்டு வைக்கும் யோசனையையும் நிராகரித்தேன். அப்படி அஞ்சி அஞ்சி வாழ்ந்து எதற்காக இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று கேட்டேன். என் மனத்தில் குடி கொண்டிருந்த வேதனையும் என் உடலைப் பற்றியிருந்த நோயும் என்னை வாழ்க்கையை வெறுக்கும்படி செய்திருந்தன. பழுவூர் மாமா! எனக்காவது என் குலத்துக்காவது நேர்ந்திருக்கும் எந்தத் தீங்குக்கும் தாங்கள் எவ்வகையிலும் பொறுப்பாளியல்ல; தங்கள் சகோதரரும் பொறுப்பாளியல்ல. அவற்றை நானேதான் தேடிக் கொண்டேன்!''




வ்வாறு சக்கரவர்த்தி கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த பெரிய பழுவேட்டரையரின் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது.

''ஆம்; சின்னப் பழுவேட்டரையர் மீது அணுவளவும் தவறில்லை. வந்தியத் தேவன் என்னும் ஒரு வாலிபன் இங்கு முதன் முதல் வந்திருந்தபோதே காலாந்தக கண்டர் எச்சரிக்கை செய்தார். அவன் இக் கோட்டைக்கு வெளியில் பல்லக்கில் வந்த பழுவூர் இளைய ராணியோடு இரகசியம் பேசியதாகக் கூறினார். அவனும் சோழ குலத்தின் எதிரிகளோடு சேர்ந்து சதி செய்பவனாக இருக்கலாம் என்று சந்தேகப்பட்டார். பழுவூர் முத்திரை மோதிரத்தைக் காட்டி அவன் கோட்டைக்குள்ளே பிரவேசித்ததையும் பழுவூர் அரண்மனையின் அந்தப்புரத்து இரகசிய வழியாகவே அவன் இங்கிருந்து தப்பிச் சென்றிருக்க வேண்டும் என்றும் கூறினார். அதையெல்லாம் நான் பொருட்படுத்தாமல் அலட்சியம் செய்து வந்தேன். அறிவிற் சிறந்த மேதாவியான நம்முடைய முதன் மந்திரி அநிருத்தரும், என் செல்வக் குமாரி இளையபிராட்டியும் கூட வந்தியத்தேவன் விஷயத்தில் ஏமாந்து போனார்கள். அவன் மூலமாக முக்கியமான ஓலைகள் அனுப்பி வைத்தார்கள்....''

அநிருத்தர் இச்சமயம், ''சக்கரவர்த்தி! நான் ஒரு வேளை ஏமாந்து போயிருக்கலாம். ஆனால் இளைய பிராட்டி அப்படியெல்லாம் எளிதில் ஏமாந்து போகக் கூடியவர் அல்ல. வந்தியத் தேவனிடம் ஓலை அனுப்பிவிட்டு, அவன் நடவடிக்கைகளைக் கவனிக்க என்னை ஏற்பாடு செய்யும்படி கூறினார். நான் ஈழத்துக்கும் என் சீடன் ஆழ்வார்க்கடியானை அனுப்பினேன்; காஞ்சிக்கும் அவனைத் தொடரும்படி அனுப்பியிருந்தேன்....''

''அப்படியே இருக்கட்டும்; நீங்கள் இருவரும் அவனிடம் ஏமாறவில்லையென்றே வைத்துக் கொள்வோம். பாதாளச் சிறையிலிருந்து அவனும் இன்னொருவனும் தப்பிச் சென்றது உண்மைதானே? அதை நீங்கள் யாரும் மறுக்க முடியாது அல்லவா? சின்னப்பழுவேட்டரையரிடம் இந்தக் கோட்டைக் காவல் இருந்திருந்தால், அவ்வாறு அவர்கள் ஒருகாலும் தப்பிச் சென்றிருக்க முடியாது. ஆகையால், சேநாதிபதி!

சின்னப் பழுவேட்டரையரை உடனே தருவித்து அவரிடம் தஞ்சைக் கோட்டைக் காவலைத் திரும்ப ஒப்புவித்து விடுங்கள். என்னுடைய கட்டளை என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்!'' என்றார் சக்கரவர்த்தி.

''அப்படியே, பிரபு! நாங்கள் இப்போது விடைபெற்றுக் கொள்ளலாமா?'' என்று சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி கேட்டார். அவருடைய குரலில் ஆத்திரம் தணிந்திருந்தது. பழுவேட்டரையர்கள் விஷயத்தில் சுந்தர சோழர் காட்டிய அன்பும் ஆதரவும் குற்றத்தைப் பொறுத்துக் குணத்தையே பாராட்டிய சிநேகப் பான்மையும் சேநாதிபதியின் உள்ளத்தையும் உருக்கி விட்டிருந்தது. அவர் ஒரு கணம் அப்படியே திகைத்துப் போய் விட்டார்.

''ஆமாம்; இப்பொழுது எல்லாரும் போகலாம். சின்னப் பழுவேட்டரையரும் வந்த பிறகு, மறுபடியும் கூடிமேலே நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசலாம். இராஜ்ய உரிமையைப் பற்றி என் பெரிய அன்னை முதியபிராட்டியாரோடு இன்னும் நான் பேசி முடிக்கவில்லை. அதற்கும் கொஞ்சம் அவகாசம் வேண்டும்!'' என்றார் சக்கரவர்த்தி.

அனைவரும் புறப்படும் சமயத்திலே பார்த்திபேந்திரன் ''ஐயா! சிநேகத்துரோகியும் இராஜ்யத் துரோகியுமான வந்தியத்தேவனைத் திரும்பக் கொண்டு வந்து ஒப்புவிக்கும் பொறுப்பை முதன் மந்திரி ஒப்புக் கொண்டார். அதை அவருக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். என் உயிருக்குயிரான ஆப்த நண்பராக இருந்த இளவரசர் ஆதித்த கரிகாலரின் கொடிய மரணத்தை வேறு யார் மறந்தாலும் நான் மறக்க முடியாது. அவருடைய மரணத்துக்குக் காரணமாயிருந்த குற்றவாளியைக் கண்டு பிடித்துத் தண்டித்தேயாக வேண்டும்!'' என்றான்.

பெரிய பழுவேட்டரையர் கிழச் சிங்கத்தின் கர்ஜனையைப் போல் ஒரு முறை தொண்டையைக் கனைத்துக் கொண்டார். ஏதோ பேச எண்ணியவர் பின்னர் தம் கருத்தை மாற்றிக் கொண்டதாகத் தோன்றியது. ஒன்றும் சொல்லாமல் வெளியேறினார். மற்றவர்களும் அவரைத் தொடர்ந்து சென்றார்கள்.



ன்று மாலையே சக்கரவர்த்தியின் கட்டளைப்படி தஞ்சாவூர்க் கோட்டையின் காவல் பொறுப்பு மீண்டும் சின்னப் பழுவேட்டரையரிடம் ஒப்புவிக்கப் பட்டது. முதலில் அவர் அதை ஏற்றுக் கொள்ளத் தயங்கினார்; ஆட்சேபணைகளும் கூறினார். இதிலும் ஏதேனும் சூழ்ச்சிகள் இருக்கக் கூடும் என்று தம் சந்தேகத்தை வெளியிட்டார். இது சக்கரவர்த்தியின் கண்டிப்பான கட்டளை என்று பெரிய பழுவேட்டரையர் எடுத்துக் கூறிய பிறகு கோட்டைக் காவலை மீண்டும் ஏற்றுக் கொண்டார்.




கருத்து: ''தேஜ்''

கொடும்பாளூர் வீரர்களில் ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் கோட்டையிலிருந்து வெளியேற்றப் பட்டார்கள். கோட்டை வாசலிலும் மதில் சுவர்களிலும் முன்போல் பழுவூர் வீரர்கள் காவல் புரியத் தொடங்கினார்கள்.

இந்த மாறுதல் விபரீதமான விளைவுகளுக்குக் காரணமாயிற்று. பழுவூர் வீரர்களுக்கும் கொடும்பாளூர் வீரர்களுக்கும் அடிக்கடி சச்சரவு மூண்டு சில சமயம் குழப்பமும் விளைந்தது.

''பொன்னியின் செல்வர் வாழ்க!'' என்ற கோஷமும், ''இளவரசர் மதுராந்தகர் வாழ்க!'' என்ற கோஷமும் மாறி மாறிப் போட்டிக் கோஷங்களாக எழுந்த வண்ணமிருந்தன.

இந்தக் கோஷங்கள் நாடெங்கும் பரவின; பொது மக்களும் அவற்றில் கலந்து கொண்டார்கள்.

அடுத்த மூன்று தினங்களில் சோழ நாடு முழுவதும் ஒரே அல்லோல கல்லோலமாகி விட்டது.

வாய்ச் சண்டை கைச் சண்டையாகித் தடியடிச் சண்டையாக முற்றியது. கழிகளும் தடிகளும் வாள்களுக்கும் வேல்களுக்கும் இடங்கொடுத்துச் சென்றன.

சில நாளைக்கு முன்பு சோழவள நாட்டைப் பாழ்படுத்திய புயலையும் வெள்ளத்தையும் போலவே இப்போது ஆத்திரப் புயலும் வெறியாகிய வெள்ளமும் நாலாபுறமும் பரவி நாட்டில் நாசத்தை விளைத்தன.

(தொடரும்)

# சிறுவனுக்குக் கால் வலி; டாக்டருக்குத் தலை வலி!



**குழந்தை நல மருத்துவர் டாக்டர் விஸ்வநாத்தின் மறக்க முடியாத அனுபவம்:**

பரிசோதிப்பதற்காக அவன் காலை இலேசாகத் தொட்டுப் பார்த்தேன். 'வலி தாங்கவில்லை' என்று அலறினான் ஏழு வயதுச் சிறுவன். அவனுடன் வந்திருந்த பெற்றோர் கவலை தேங்கிய முகத்துடன் சொன்னார்கள்: "இப்படித்தான் டாக்டர்! தினமும் 'கால்வலி' என்று அழுகிறான். முழங்காலில் ஆரம்பித்துப் பாதம் வரை வலிக்கிறதாம். ராத்திரி ஒருவாறு சமாதானப் படுத்தித் தூங்க வைத்தால் காலையில் எழுந்ததும் திரும்பவும் வலி ஆரம்பமாகிவிடுகிறது. நாங்களும் வளர்ற ப்பயன், ஓடி ஆடி விளையாடுவதால் கால்வலி வருகிறது என்று நினைத்துக் கொண்டிருந்தோம். ஆனால் இந்தக் கால்வலியால் அவன் படிப்புக் கெட்டுப்போகிறது. மூன்று மாதங்களாய் ஒழுங்காக ஸ்கூலுக்குப் போவதில்லை. போகும் சில தினங்களிலும் பாதியில் திடீரென்று கால்வலி வந்து அழ ஆரம்பித்து வீடு திரும்பி விடுகிறான்."

பரிசோதனையிலும் சரி, எக்ஸ்-ரேயிலும் சரி, எந்தக் கோளாறும் புலப்படவில்லை. இரண்டு நாட்களுக்கு, சாதாரண வலி நிவாரணி மாத்திரைகளைக் கொடுத்துப் பார்க்கச் சொன்னேன். துளிக்கூடப் பயனில்லை!

ஒரு கட்டத்தில் ஏதோ சாக்கு போக்குச் சொல்லி பெற்றோரை வெளியே அனுப்பி விட்டுப் பையனுடன் தனியாகப் பேசினேன். அப்போதுதான் அச் சிறுவன் தனக்குப் பள்ளிக்கூடம் போவதில் விருப்பமேயில்லை என்று தன்னையும் அறியாமல் வெளிப்படுத்தினான். மேலும் அனுதாபம் காட்டி பேசிய போது காரணமும் புரிந்தது.

எல். கே. ஜி முதல் ஒரு பள்ளியில் படித்து வந்த சிறுவன் ஒரு நாள் ஏதோ விஷமம் பண்ணப்போக, வகுப்பாசிரியர் அவனைக் கடுமையாகத் திட்டி, தண்டித்திருக்கிறார். பையனைக் காட்டிலும் அவன் அப்பாவுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்துவிட்டது! 'நீ என்னமாய் என் மகனைத் தண்டிப்பாய்' என்று முறைத்துக் கொண்டு மறுநாளே பையனை அந்தப் பள்ளியிலிருந்து வேறு பள்ளிக்கு மாற்றி விட்டார். சிறுவனுக்கோ, எல். கே. ஜி. முதல் உடன் படித்து வந்த தோழர்களைப் பிரிந்தது மிகவும் ஏக்கமாகிவிட்டது. புதிய பள்ளி மேல் வெறுப்பு. அப்பாவிடம் பழைய பள்ளிக்கே மீண்டும் மாற்றும்படி கெஞ்சியிருக்கிறான். அவருக்குக் கடுமையான கோபம் வந்து அவனைத் திட்டியதுதான் மிச்சம்.

சிறுவனின் மனத்தில் புதிய பள்ளிக்குப் போகக்கூடாது, திட்டும் வாங்கக் கூடாது என்ற எண்ணங்கள் வேரூன்றிவிட்டன. இந்தத் தீர்மானங்களின் விளைவுதான் கற்பனைக் கால்வலி! இந்தக் கால்வலிக்கு ஒரே மருந்து அவனைப் பழைய பள்ளியிலேயே திரும்பவும் சேர்ப்பதுதான்" என்று அவன் பெற்றோரிடம் சொன்னேன். அவர்களும் ஆவன செய்ய, கால்வலி மாயமாய் மறைந்தது! என் "தலைவலி"யும்தான்!

சந்திப்பு: **மௌஷ்மி.**

படம்: **யோகா.**



• டாக்டர். விஸ்வநாதன்

# மறுபக்கம்

நான் குப்புறக் கீழே விழுந்ததால் வாயெல்லாம் மணல்! எழுந்து ஓர் ஓரமாகத் துப்பினேன். என்னை அடித்தவன் கிழித்துப் போட்ட கார்டும் என் ஃபைலும், மண்ணில் சிதறிக் கிடந்தன. குனிந்து பொறுக்கிய பொழுது இடுப்பு எலும்பு வின் என்று வலித்தது. சட்டையின் முன் பகுதி கிழிந்து தொங்கிக் கொண்டிருந்தது. 'உன் ஷர்ட்டில் இது ஒன்றுதான் எடுப்பாய் இருக்கிறது' என்று ரஞ்சனி முத்தம் கொடுத்த பாக்கெட் பகுதி.....

சுதாரித்துக் கொண்டு, பக்கத்தில் இருந்த சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்தேன். மில்லின் ஷிஃப்ட் முடிய இன்னும் நேரம் இருந்ததால், அவன் என்னை அடித்த பொழுது வெளியில் அதிகம் ஆட்கள் இருக்கவில்லை.

''சங்கரலிங்கத்தைப் பத்தி எக்குத்தப்பா உன் பத்திரிகைல எழுதினே! தீர்த்திருவேன் தீர்த்து!'' என்று மிரட்டிவிட்டு அடித்தான்!

எனக்கு அவமானமாக இருந்தது. விஷயம் சுலபமாக முடிந்து விடும்; பாதிக்கப்பட்ட தொழிலாளர்களின் வீட்டில் போய் நாலைந்து பேட்டி, ஊர் மக்களிடம் விசாரிப்பு, இரண்டு கட்சிக்காரர்களின் முன் வந்த கருத்து இத்தனையையும் சேர்த்து, 'விக்ரமசிங்கபுரத்தில் மில் அதிபரின் அட்டகாசம்' என்ற தலைப்பில் இன்னொரு ஊழலை வெளிப்படுத்தலாம் என்றால், இங்கே ஆரம்பமே அடியுடன் தொடங்குகிறது!

தப்பான இடத்திலிருந்து ஆரம்பித்து விட்டோமோ என்று தோன்றியது. நூறு 'சார்வாள்' போட்டு விசாரித்த ப்ரொடக்ஷன் மானேஜரை நம்பியது பிசகு. இந்தப் பத்திரிகையிலிருந்து வந்திருக்கிறேன் என்று கார்ட் நீட்டும் பொழுது எகிறும் வழக்கமான கர்வம்தான் ப்ரொடக்ஷன் மானேஜரிடம் கார்ட் நீட்டிய பொழுதும் ஏற்பட்டது.

''பத்திரிகைன்னா அச்சாபீஸும் ஒண்ணா இருக்குமா? தனியா கொடுத்துதான் பிரிண்ட் பண்ணிப்பேளா சார்வாள்?''

''எங்க பத்திரிகைக்குத் தனியாவே ப்ரஸ் உண்டு.''

''நீங்க என்ன விஷயமா எங்க திருநெல்வேலிக்கு வந்திருக்கேள் சார்வாள்?''

''ஒட்டுமொத்தமா ஐம்பது தொழிலாளிங்களை வேலை நீக்கம் செஞ்சுட்டதாவும், ஆளும் கட்சியின் ஆதரவு இருப்பதால், அளவு மீறிய ஆணவப் போக்கில் உங்கள் முதலாளி மிஸ்டர் சங்கரலிங்கம் தொழிலாளர்களிடம் நடந்து கொள்வதாகவும், இரண்டு வருஷமா போனஸ் பாக்கி இருப்பதாகவும் எங்கள் பத்திரிகைக்குத் தகவல் வந்திருக்கு.''

சிரித்துக் கொண்டே ப்ரொடக்ஷன் மானேஜர் அத்தனையையும் மறுத்தான். அவனுடைய பேச்சு முழுவதும், மில் முதலாளி சங்கரலிங்கம் அந்த வட்டாரத்தைப் புனருத்தாரணம் செய்ய வந்த தேவதூதன் என்ற தொனியில் இருந்தது. நானும் அவனுடைய வாதம் முழுவதும் நிர்வாகம் சார்ந்த ஒரு தொழிலாளியின் பேச்சு அல்லது முகஸ்துதி என்பதால் அதற்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. அவனுக்குச் சாதகமாக அவன் சொல்லும் வாதங்களை ஏற்றுக் கொள்வது போல் பேசி அவனிடமிருந்து விஷயம் கறந்து கொண்டேன்.

''முதலாளியை நேரில் பார்க்க முடியுமா?''

''இப்போ அவர் மில்லில் இல்லை சார்வாள்.''

''எங்கே இருக்கார்?''

''அவர் வீட்டில். அம்பாசமுத்திரத்தில்.''

''முகவரி கிடைக்குமா?''

அவன் கொடுத்த விஸிட்டிங் கார்டை வாங்கிக்கொண்டு வெளியில் வரும்பொழுது தான் இந்த விபரீதம் நடந்தது.

எனக்குக் குழப்பமானது. எதிர்ப் பக்கம் சென்று அம்பாசமுத்திரம் போகும் பஸ்ஸில் ஏறிக் கொண்டேன். லாட்ஜில் என் ரூமில் போய் விழுந்ததும் நான் செய்ய வேண்டியவற்றை வரிசைப் படுத்திக் கொண்டேன். எங்கள் பத்திரிகைக்கு வந்த மில் தொழிலாளர்களின் விண்ணப்ப மனுவில் குறிப்பிட்ட இரண்டு முகவரிகளை டயரியில் குறித்துக் கொண்டேன். முதலில் சங்கரலிங்கத்தைப் பார்ப்பதா அல்லது இவர்களைப் பார்ப்பதா என்று தெரியவில்லை. பயம் காரணமா? என் தாடையை அந்த முகம் தெரியாதவன் தன் முரட்டுக் கைகளால் அழுத்திப் பிடித்து 'எங்க முதலாளியைப் பத்தி தப்பா எழு

சத்தியப்பிரியன்

தினே தொலைச்சிடுவேன்' என்று மிரட்டியது உள்ளே பயமாகச் சுருண்டு கொண்டிருக்கிறதா? ஆசிரியருக்கு எஸ். டி. டி. போட்டுப் பேசலாமா? தப்பாக நினைத்து விட்டால்? தயிர் சாதத்துக்கு 'தில்' இல்லைப்பா என்று சிரிப்பார். நாளை என் பதவி போகும். 'எந்த இடமா இருந்தா என்ன? தாமோதரனைக் கூப்பிடு!' என் பதில் இரண்டாவது யோசனைக்கு இடம் கொடுத்து விடும். கூடாது! சங்கரலிங்கத்தைச் சிக்க வைக்க வேண்டும்! கட்டுரை புது விதமாக அமைய வேண்டும்.

லாட்ஜிலிருந்து சங்கரலிங்கத்துக்கு ஃபோன் பண்ணினேன்.

''யார் வேணும்?''

''திரு. சங்கரலிங்கத்தோட பேட்டி வேணும்.''

''நீங்க யாரு?''

''விதூஷகன் பத்திரிகை நிருபர்.''

''ரெண்டு மணிக்கு மேல் வாங்க.''

வெளியில் சென்று கௌரி சங்கர் ஹோட்டலில் சாப்பிட்டு விட்டுக் கிளம்ப நேரம் சரியாக இருந்தது.

அம்பாசமுத்திரத்தின் விளிம்பில் விஸ்தாரமான நிலப்பரப்பில் வெள்ளை நிறத்தில் பெரிய பங்களாதான் சங்கரலிங்கத்தின் வீடென்று அடையாளம் காட்டப்பட்டது. புல்வெளி, ரோஜாத் தொட்டிகள், பொமரேனியன், கூர்க்கா போன்ற அத்தனை பணக்காரத்தனமும் அந்த பங்களாவின் உறுப்புக்களாக ஒட்டிக் கொண்டிருந்தன. நான் வரவேற்கப்பட்டு, ட்ராயிங் ரூமில் உட்கார வைக்கப்பட்டு, பிஸ்கட், கூல்ட்ரிங்கால் உபசரிக்கப் பட்டேன். இரண்டு நிமிடங்களில் சங்கரலிங்கம் என்னை வந்து பார்ப்பார் என்ற தகவல் எனக்குத் தரப்பட்டது.

ஒரு பெரிய மில்லை நிர்வாகம் பண்ணும் தோரணையுடன் சங்கரலிங்கம் வந்தாலும் அவரிடம் அளவுக்கு அதிகமான எளிமை தெரிந்தது. கதர் சட்டை கதர் வேட்டி. பெரிய விழுங்கும் கண்கள். அவற்றில் கூர்மையான தீட்சண்யம். நான் ஸ்விட்ச் போட்டதைப் போல எழுந்து நின்றேன்.

''உட்காருங்க தம்பி!'' அவர் வேண்டுதலில் ஒரு கட்டாயம் தெரிய, உட்கார்ந்து கொண்டேன்.

''தப்பு நடந்துடுச்சு தம்பி! என் மேல் விசுவாசமா இருக்கிறவன் உங்க மேல் கை வெச்சிட்டதாக் கேள்விப்பட்டேன். மன்னிச்






**விளவங்கோடு தொகுதி வாசகர்களுக்கு நினைவூட்டுகிறோம்!**

கல்கியின் மாதம் ஒரு தொகுதி திட்டத்தின் கீழ் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட இரண்டாவது தொகுதி உங்கள் தொகுதிதான். உங்கள் எம். எல். ஏ. கொடுத்த வாக்குறுதிகள் எவ்வளவு தூரத்தில் இருக்கின்றன? தொகுதி நிலவரம் என்ன? அதன் அபிவிருத்திக்கு நீங்கள் ஏதேனும் யோசனைகள் தர விரும்புகிறீர்களா? உறையின் மேல் 'மாதம் ஒரு தொகுதி' என்று குறிப்பிட்டு உடனே எழுதுங்கள். உங்கள் கடிதங்கள் ஏப்ரல் 11 – ந்தேதிக்குள் எங்களுக்கு வந்து சேர வேண்டும்.

— ஆசிரியர்.

---

சுக்குங்க,'' என்றார்.

''ஒப்புதல் இல்லை சார் எனக்கு. தொட்டில் சமாதானமாப் படுது. எங்களுக்கு வந்திருக்கற லெட்டர்ஸ் வச்சுப் பார்த்தா உங்களைத்தான் சந்தேகிக்கத் தோணுது.''

''என்ன வயசிருக்கும் உங்களுக்கு?''

''இருபத்தியேழு.''

''எத்தனை வருஷமா நிருபரா இருக்கீங்க?''

''மூணு வருஷமா?'

''அப்படியா?'' என்றார்.

''ஏன் தம்பி! எனக்கு எதிரா தர்ணாவும், உண்ணாவிரதமும் இருக்கும் தொழிலாளிங்க இருப்பது மாதிரி எனக்கு விசுவாசமான தொழிலாளிங்க இருக்கக் கூடாதா? அதுக்காக உங்களை அடிச்சது சரின்னு சொல்ல வரலை....'' என்றார்.

''என்ன காரணத்துக்காக விசுவாசமா இருக்காங்கறது மறுக்க முடியாதில்லியா?''

''ஓகே. பாதிக்கப்பட்ட தொழிலாளிங்களைப் பேட்டி எடுத்திட்டீங்களா?''

''இன்னும் இல்லை.''

''ஒண்ணு செய்யலாமா? நான் திருநெல்வேலி வரை போகணும். என் காரில் வந்து பேட்டியைத் தொடரலாமா?''

''சரி.''

''எனக்குக் கூட இப்போ ஊழலைக் கண்டு பிடிக்கக் கிளம்பியிருக்கும் ப்ரோப் மாகஸின்லோட நோக்கம் என்னன்னு தெளிவாப் புரிஞ்சுக்கிட்ட மாதிரி இருக்கும்.''

**அ**வருடன் காரில் பயணமானேன். மில் பற்றி, மிக்ஸிங் பற்றி, ப்ளெண்டிங் பற்றி, ஸ்பின்னிங் பற்றிச் சொல்லிக் கொண்டே வந்தார்.

''ஒரு ஃப்ரேமுக்கு எத்தனை ஸ்பிண்டில்னு தெரியுமா தம்பி?''

''தெரியாது.''

''எந்த அளவு ஈரப் பதத்தில் பஞ்சு நூலாகும்னு தெரியுமா?''

''தெரியாது.''

''ஒரு தொழிலாளி எட்டு மணி நேரத்தில் எத்தனை கோன் ஸ்பிண்டில் பண்ணணும், எத்தனை கிலோ பஞ்சை ப்ளெண்ட் பண்ணணும் இதெல்லாம் தெரியுமா?''

''தெரியாது.''

''அப்புறம் எப்படி பாதிக்கப்பட்ட தொழிலாளிங்க சொல்றது சரின்னு நம்பிக் கட்டுரை எழுதப் போறீங்க?''

எனக்குப் பின் கழுத்திலும், நெற்றியிலும் வியர்த்தது. காரில் ஏஸி சீராக இயங்கிக் கொண்டிருந்தது.

''உங்க பத்திரிகையின் சர்குலேஷன் எவ்வளவு தம்பி?''

''வாரம் ஒன்றரை லட்சம் பிரதிகள்.''

''குட். உங்க பத்திரிகையின் லட்சியம்?''

''இட் இஸ் எ ப்ரோப் மாகஸின். எங்கெல்லாம் கெட்டது நடக்குதோ அதை மக்களுக்குத் தெரியப்படுத்துவது.''

''ஓகோ!''

இதற்குள் கார் ஒரு சின்ன பட்டறையின் முன்பு நின்றது. நெடுஞ்சாலையின் ஓரமாக இருந்த அதில், இருபது வயசுக்கு ஓர் இளைஞன்... வல்கனைசிங்கிற்கான உபகரணங்கள், வண்டிகளை ஏற்றி நிமிர்த்த ஒரு ஜாக்கி, இவ்வளவுதான். ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டு பீடி குடித்துக் கொண்டிருந்த அந்த வாலிபன் சங்கரலிங்கம் காரைப் பார்த்ததும் ஓடி வந்தான்.

''அலி டயர் ரெடியா?'' என்றார்.

''ஆயிடுச்சு சார். மௌத் போயிருந்தது. ப்ரெஸ் பண்ணிச் சரியாக்க டைமாயிடுச்சு.''

அலி என்று அழைக்கப்பட்டவன் ஒரு டயரை உருட்டிக் கொண்டு வந்து டிக்கியில் போட்டான்.

''கூலி எவ்ளோ?''

''குடுக்கறதைக் குடு சார்.''

''ரெண்டு ரூபா தர்றேம்பேன். வாங்கிப்பியா?''

அலி ரெடிமேடாகச் சிரித்தான். சங்கரலிங்கம் இருபது ரூபாய் நோட்டை நீட்

# இப்போது விம்
# ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை
## அளிக்கும் (கேரிபேக்) தூக்குப் பை.




இப்போது ஏறக்குறைய பாதி விலையில கிடைக்கிறது நீங்கள் விரும்பும் விம் ... பணமிச்சம் தரும் (கேரி பேக்) தூக்குப் பைகளிலே !

ஒப்பிட்டுப் பாருங்களேன்

| பேக் | 100 கிராம் விலை |
|---|---|
| 500 கிராம் கேனிஸ்டர் | 135 பைசா |
| 2.5 கிலோ கேரிபேக் பை | 75 பைசா |

உபயோகிப்பிலேயோ மேலும் சிக்கன லாபம் கிடைக்கிறது இதில் உங்களுக்கு ஒரு துளியளவு விம் உயர்வளமோங்கும் நுரை கொழித்து பிசுக்குகளை விசுக் என வெளியேற்றுகிறது கணக்குக்காக.... அதிகப் பாத்திரங்களைத் துலக்குகிறது ஒளிமிகுக்க.

விரைந்தோடி இன்றே வாங்குவீர் புதிய விம் கேரிபேக் உங்கள் தேவைக்குகந்த அளவிலே (தேர்ந்தெடுக்க கிடைப்பவை 500 கிராம், 1 கிலோ, அல்லது 2.5 கிலோ பேக்குகள்)

## ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்

LINTAS VG 482 2213 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு



* கோவை பி. எஸ். ஜி. கலைக் கல்லூரி ஸ்டாப்பிங் வந்ததும் பஸ் நின்றது. ஏழெட்டு மாணவிகள் இறங்கிக் கொண்டிருந்தார்கள். கடைசி மாணவி இறங்குவதற்குள் டிரைவர் பஸ்ஸைக் கிளப்பி விடவே, கீழே நின்று கொண்டிருந்த மாணவிகள் தட...தட...வெனத் தட்டினார்கள். இதனால் எரிச்சலுற்ற கண்டக்டர், ''ஏம்மா, பஸ்ஸை இப்படி உடைக்கிறீங்க?'' என்று கோபத்துடன் கேட்க, ஒரு மாணவி, ''உடைக்கிறோமா? யார் சொன்னது? எங்களை பத்திரமா இறக்கியதற்குத் தட்டியல்லவா கொடுத்தோம்!'' என்று ஒரு போடு போட கண்டக்டர் உள்பட அனைவரும் சிரித்து விட்டோம்!

— சக்தி. ஏ. ஜே. ஜப்பார்.



''ஐந்நூறு விக்கெட்டுகளை எடுப்பதே என் அடுத்த லட்சியம்'' என்று கூறும் ''ஹாட்லி'' மேலும் என்ன சொல்கிறார், தெரியுமா?

''பந்துவீச்சில் என் சாதனையை முறியடிக்கக் கூடியவர் கபில்தேவ்தான். ஆனால் இந்தியத் தேர்வாளர்களின் போக்கு காரணமாக எதையும் நிச்சயமாகச் சொல்லுவதற்கில்லை!''

— என். விக்னேஷ்.



கொடிக் கம்பத்தில் பறக்கும் தேசியக் கொடிகளில் மிகவும் பெரியது பிரேஸில் நாட்டின் கொடிதான். இந் நாட்டின் தலைநகர் பிரஸிலியாவில் பறக்கும் இந்தக் கொடியின் பரப்பளவு 229 அடி 3 அங்குலம் × 328 அடி 1 அங்குலம்!

தக்கோலம் என். பாலையன்.

டினார். பாக்கி வாங்கிக் கொள்ளாமல் காரைக் கிளப்பினார். கொஞ்ச தூரம் போனதும் ஒரு பெரிய புளியமரத்தின் நிழலில் வண்டியை நிறுத்தினார்.

''கிட்டத்தட்ட ஏழெட்டு பத்திரிகைகள்ல இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிஸமா வந்துக்கிட்டிருக்கு. பொதுவா இந்த மாதிரி பத்திரிகைகளோட நோக்கம் என்ன தெரியுமா? எங்கே அநியாயம் நடக்குது, எங்க அக்ரமம் நடக்குதுன்னு கண்டு பிடிச்சு வெளியில் கொண்டு வர்றது மட்டும்தான். மேலாப்ல பாத்தா நீங்க சொல்றது சரின்னு படும். கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க.... வாரம் ஒண்ணரை லட்சம் பிரதி ஓடுதுன்னு சொல்றீங்க. ஒண்ணரை லட்சம் ஜனங்க வாசிக்கறாங்க, கணக்குதான் ஒண்ணரை லட்சம் — நிஜமா அதுக்கு மேல படிப்பாங்க. அவன் கொள்ளையடிச்சான், இவன் லஞ்சம் வாங்கினான், இந்த போலீஸ் அதிகாரி பொண்ணைக் கற்பழிச்சான்னு படிக்கறச்சே எவனும் யோக்யன் இல்லைன்னுதான் முடிவுக்கு வருவாங்க. ஒப்பு நோக்கும் மத்தியதர வர்க்கத்தின் வக்ரபுத்தி இன்னும் வக்ரமாயிடும். இந்த வக்ர புத்தியைச் சாதகமா வெச்சுத்தான் அத்தனை ப்ரோப்மாக ஸின்ஸும் பொழப்பு நடத்துது.''

''அப்போ இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிஸமே கூடாதுங்கறீங்களா?''

''அய்யோ தம்பி. நான் அந்த தொனியில் சொல்லலை!.... அந்தப் பட்டறையில் வேலை செய்யும் பையனைப் பாத்தியா? வயசு இருபது ஆச்சு. அஞ்சு வயசிலிருந்து தொழில் பண்றான். பஞ்சர் ஒட்டி, வல்கனைஸ் பண்ணி ஒரு நாளைக்கு நூத்தம்பது ரூபா சம்பாதிக்கிறான். ஜாக்கியைக் கொடுத்துச் சுத்தினான்னா நிமிஷத்தில் என்ன லோடு லாரியானாலும் மேலே தூக்கி, டயர் கழட்டிடுவான். நேர்மையா உழைச்சுச் சம்பாதிக்கிறான். இவனைப் பத்தி எழுதுங்க தம்பி. இவன் வாழ்க்கையில் பரபரப்பு கொடுக்கும் செய்தி இல்லைன்னு விட்டுடாதீங்க. இவனைப் போல உழைச்சா எல்லோரும் வாழலாம்னு நம்பிக்கை கொடுங்க. யோசிச்சுப் பாருங்க.... நல்லதை இன்வெஸ்டிகேட் பண்ணி வெளியில் கொண்டு வர்றதும் பத்திரிகை தர்மமில்லையா?''

அதன் பிறகு அவருடைய மில் தொழிலாளர்களைப் பேட்டி கண்டு மையமாக யாரையும் பாதிக்காமல் ஒரு கட்டுரை எழுதி விட்டேன். பரபரப்பு, வியாபாரம் காரணமாக நான் மேலும் பல ஊழல்களை அம்பலப்படுத்திக் கட்டுரைகள் தர வேண்டும் என்று பத்திரிகை என்னிடம் எதிர்பார்க்கும். பிழைப்பு காரணமாக நானும் என் பத்திரிகை எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்யலாம். சங்கரலிங்கம் சொன்னது மட்டும் ஒரு மூலையில் உறுத்திக் கொண்டிருக்கும்.

## கவிதைக்குள் ஒரு கவிதை:

அயோத்தியில் அரண்மனை வாழ்க்கையை அனுபவித்த ராமனும் சீதையும் ஆரண்யம் வருகிறார்கள். அப்போது அவர்கள் மனநிலை எவ்வாறு இருக்கிறது? அங்கிருந்த போது இருந்த அதே மனநிறைவு இங்கும் இருக்கிறது. ஏற்றத்தாழ்வுகளைச் சமநிலையில் இருந்து ஏற்கிறான் ராமன். சொல்லப் போனால் இங்கே அவனுக்கு மகிழ்ச்சி சற்றுக் கூடுதலாகவே இருக்கிறது. காரணம், ஒரு 'ஹாலிடே மூட்' வந்துவிடுகிறது! ராஜ்யத்தை இழப்பது தியாகம்தான் என்றாலும் அந்தத் தியாகத்தைச் செய்யத் தயாரான பிறகு — மனம் பக்குவப்பட்ட பிறகு — பொறுப்புக்கள் குறைவதால் மனம் இலேசாகிவிடுகிறதல்லவா?

அப்படி கவலையற்ற மனத்துடன் அவன் கானகத்தின் எழில்களை ரசிக்கிறான். கானகத்தின் எழில்களை மட்டுமா? அவற்றுடன் காதலியின் அழகுகளையும்தான்! நதிக்கரையிலே ஓர் அன்னம் ஒதுங்குவதைப் பார்க்கும் போது அதனை சீதையின் நடை அழகுடன் ஒப்பிடத் தோன்றுகிறது அவனுக்கு. உடனே, அவள் நடப்பதையும் திரும்பிப் பார்த்து இலேசாகப் புன்னகை புரிகிறான்.

**ஓதிமம் ஒதுங்க, கண்ட உத்தமன்,**
**உழையள் ஆகும்**
**சீதை தன் நடையை நோக்கி, சிறியது**
**ஓர் முறுவல் செய்தான்;**
**மாது அவள் தானும், ஆண்டுவந்து,**
**நீர் உண்டு, மீளும்,**
**போதகம் நடப்ப நோக்கி, புதியது**
**ஓர் முறுவல் பூத்தாள்!**

பாடலில் 'ஒதுங்க' என்ற சொல் கவிநயம் மிக்கது. சீதையின் நடையைக் கண்டபின், 'இங்கு நமக்கென்ன வேலை' என்பது போல் தோல்வியை ஒப்புக் கொண்டு அன்னம் ஒதுங்கி விடுகிறது!

அதேபோல் ஆற்றிலே நீரைப் பருக வந்த ஆண் யானையும் திரும்பிச் செல்கிறது. அதைப் பார்த்ததும் சீதைக்கு ராமனின் கம்பீர நடைக்கு அதனை உவமையாக்கத் தோன்றுகிறது. அன்னத்தின் நடையையும், யானையின் நடையையும் உவமைகளாக்குவது சிறந்த ரசனைதான். ஆனால் கம்பன் பாடல் அதற்கு ஒரு படி மேலே போய், அன்னமும் யானையும் தோல்வியை ஒப்புக் கொள்வதாகக் குறிப்பால் உணர்த்துகிறது.

இன்னொரு நயமான சொல் கடைசி வரியில் வருகிற 'புதியது' என்ற வார்த்தை. சீதையின் முறுவல், அதுவரை காணப்படாத ஒரு புதுரகப் புன்னகையாம்! அதென்ன, புதியதோர் முறுவல்? புதுப்புது அர்த்தங்களைப் பொங்கு புனலாகத் தெளித்து, நெஞ்சைக் குளிர்விக்கிறது 'புதியது' என்ற அந்தச் சொல்! 'கூறாமல் கூறுவதில் கம்பன் எத்தகைய வல்லவன்!' என்று நம்மை வியக்க வைக்கிறது.




— ஜானகி கிருஷ்ணன்,
பாளையங்கோட்டை.

# கனவுச் சுமைகளுடன் ஓடிப் போனவர்கள்

அன்றைய தினம் சற்று வித்தியாச மாகவே விடிந்தது. பால்காரன் தொடர்ந்து சைக்கிள் மணியை ஆங்காரமாய் அடித்துக் கொண்டிருக்க, சட்டென்று மீனாட்சியம் மாளுக்குத் தூக்கம் கலைந்தது. படபடப் பாய்ப் பாத்திரத்தைத் தூக்கிக் கொண்டு வாசலுக்கு ஓடினார். பால் வாங்கிக் கொண்டு வீட்டிற்குள் நுழையும் போதுதான் பார்த்தார். மகள் மல்லிகாவின் படுக்கை விரித்துக் கிடக்க ஆளைக் காணவில்லை. பாத்ரூம் கதவு திறந்து கிடந்தது. எங்கும் விளக்கு எரியவில்லை. இலேசான பதற்றத் துடன் வீடு முழுக்கத் தேடினார். மல்லிகா வைக் காணவில்லை. வீதிக்கு வந்து பார்த் தார். இருள் பிரிந்து மலராத காலைப் பொழுது மொட்டாய் இருந்தது. சூரியன் உச்சிக்கு வரும் வரை தேடித் தேடிப் பார்த்து, சினேகிதிகள் வீட்டிலெல்லாம் விசாரித்தார் கள். தகவலே கிட்டாமல் போக, போலீஸ் கம்ப்ளெய்ன்ட் தர வேண்டியதாயிற்று. போலீஸ் மல்லிகாவை ஒரு மாநகர் ரயிலடி யிலிருந்து மீட்டு வந்தனர். என்ன பயன்! சினிமா மாயையால் கவரப்பட்டு 'ஓடிப் போனவள்' என்ற முத்திரை குத்தப்பட்டு, கை நழுவிய கண்ணாடி பாத்திரமாகவே ஆகி விட்டது பதினெட்டு வயது மல்லிகா வின் வாழ்க்கை.

'வீட்டை விட்டு ஓடிப் போகின்ற பெண்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டேதான் வருகிறது. பல ஊர்களிலிருந்தும் இப்படி 'ஓடி'ப் போகிற வர்கள் பெரும்பாலும் ரயிலேறி சென்னைக் குத்தான் வருகின்றார்கள்'' என்றார் ரயில்வே போலீஸ் சூப்பரின்டென்டென்ட் என். குணசேகரன். அவர் கூறிய சில கதை களின் சுருக்கம்:



• குணசேகரன்



• இமாக்குலேட்

●● திருநெல்வேலியிலிருந்து செல்வி என்ற பதினேழு வயதுப் பெண் ரஜினிகாந்தைப் பார்த்து, சினிமாவில் சேர வேண்டும் என்று ஓடி வந்து விட்டாள். செல்விக்கு ஏற்கெனவே கல்யாணம் நிச்சயமாகி, முகூர்த்தத்துக்கு இருபது நாட்களே பாக்கியிருந்தன. அதற்குள் இப்படி ஓடி வந்து விட்டாள். போலீஸ் செல்வியின் பெற்றோர்களுக்குத் தகவல் அனுப்ப, அவர்கள் உடனே அடித்துப் பிடித்து ஓடி வந்து விட்டார்கள். கூடவே கல்யாண மாப்பிள்ளையையும் செல்வியின் பெற்றோர்கள் கூப்பிட்டு வந்து விட்டார்கள். செல்வியின் அப்பா போலீஸிடம், "என் மகள் ஒரு தப்பும் பண்ணலை; யாரையும் இழுத்துக்கிட்டு ஒடி வரலை... தான் மட்டுமே ஓடி வந்தாள் என்று மாப்பிள்ளை பையனிடம் கொஞ்சம் எடுத்துச் சொல்லுங்கள்" என்று வேண்டியிருக்கிறார். போலீஸ் எடுத்துச் சொன்ன பிறகே அந்த மாப்பிள்ளை அப் பெண் களங்கமற்றவள் என்று நம்பி ஏற்றுக் கொண்டான்.

●● நன்னிலத்திலிருந்து சுசீலா, சித்ரா, ரேணுகா என்ற மூன்று பெண்களும் ஓடி வந்து விட்டார்கள். இவர்கள் முறையே எட்டாம் வகுப்பு, ஒன்பதாம் வகுப்பு,



பத்தாம் வகுப்பு (இரண்டாம் வருடம்) படித்துக் கொண்டிருப்பவர்கள். எதற்காக இப்படிச் சேர்ந்து ஓடி வந்தார்கள் தெரியுமா? வீட்டை விட்டு ஓடி வந்தால் இவர்களின் பெயரும் படமும் பேப்பரில் வருமாம்! பேப்பரில் போட்டோ வந்தால் உடனே பிரபலமாகி விடலாமாம். இவர்களுடைய போட்டோவைப் பேப்பரில் பார்த்து விட்டு யாராவது சினிமாவில் நடிக்கக் கூப்பிட்டாலும் கூப்பிடுவார்களாம்! எப்படி இவர்களின் திட்டம்? கையில் "மகளே உன் பிரிவால் அம்மாவும் தம்பியும் சாப்பிடவே இல்லை..." என்ற வழக்கமான பேப்பர் கட்டிங் வைத்திருந்தார்கள். இவர்களின் ஆசைப்படியே மாலைப் பத்திரிகையில் இவர்கள் போட்டோவும் பெயரும் வந்து விட்டது. பின்பு மூவரையும் போலீஸ் வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்துள்ளது!

●● மைதிலி சென்னை, அண்ணா நகரில் வசிப்பவள். அப்பா தனியார் கம்பெனியில் பெரிய இஞ்ஜினியர். ஒரு நாள் மாலை, மைதிலி வீட்டுத் தோட்டத்தில் பூப் பறித்துக் கொண்டிருந்தாள். அப்போது அந்த வழியாகச் சென்ற ஓர் இளைஞன் இவளைப் பார்த்துக் கொண்டே சைக்கிளில் போனான். சற்று நேரம் கழித்துத் திரும்பி வந்தான். மைதிலியும் அவனைப் பார்த்தாள். அடிக்கடி பள்ளிக்கூடம் போகும் போது பார்த்த முகம்தான். அவன் வெகு நேரமாய் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். பின் மெள்ள அருகில் வந்து "நீ ரொம்ப அழகா இருக்கே!" என்று கூற, மைதிலிக்கு வெட்கமாகி விட்டது. மறுநாள் பள்ளிக்கூடம் சென்ற போது, அவளை மடக்கி, "நான் உன் மேலே உசிரையே வெச்சிருக்கேன். உன் அழகுதான் என்னைக் கிறங்கடிக்குது" என்று அவன் பேச, மைதிலி மயங்கி விட்டாள். "நாம ஓடிப் போயிடலாமா?" என்று கேட்க, அவளும் தலையை ஆட்டி விட்டாள். அவளை எங்கெங்கோ கூப்பிட்டுப் போய் அலைக்கழித்து, பின் சென்ட்ரல் ஸ்டேஷனில் கொண்டு வந்து விட்டு விட்டுப் போய் விட்டான். அவன் யார் எந்த ஊர்... ம்ஹூம் எதுவுமே மைதிலிக்குத் தெரியவில்லை. அவன் பெயர் ரமேஷ் என்று மட்டும் சொன்னானாம்!

●● பதினாறு வயது பாத்திமா பீவி தன் தங்கை நஸீம் அப்தாயிரையும் தம்பி நூர்



முகமதுவையும் வியாசர்பாடியிலிருந்து அழைத்துக் கொண்டு ஓடி வந்து விட்டாள். மூன்று பேரும் கையில் ஆளுக்கொரு பை வைத்திருந்தார்கள். அவற்றில் அரிசி, பருப்பு, உப்பு, மிளகாய், புளி என்று சமையல் சாமான்கள். மெட்ராஸில் கூலி வேலை செய்து கொண்டு நிம்மதியாகச் சமைத்துச் சாப்பிடுவோம் என்று திட்டம் போட்டு வந்திருக்கின்றார்கள். அம்மா இறந்ததும் அப்பா வேறு கலியாணம் செய்து கொள்ள, சித்திக் கொடுமையை பாத்திமா பீவியால் தாங்க முடியவில்லை

போலீஸ் பாத்திமா பீவிக்கு அறிவுரைகள் கூறி, திரும்பவும் வியாசர்பாடிக்கு அழைத்துச் சென்றது. அப்போது பாத்திமா பீவி தன் கூட வந்த பெண் காவல் அதிகாரியிடம் ''மேடம் என்னை எங்க வூட்டுக்கு கொண்டு போய் விடாதீங்க எங்க சித்தப்பா என் கிட்டே தப்பா நடந்துக்கிறார். ஒருநாள் ராத்திரியிலே...'' என்று சொல்ல முடியாமல் தேம்பி அழுதிருக்கிறாள். விஷயத்தைப் பெற்றோர்களிடம் சொல்லி எச்சரித்து பாத்திமாவை வீட்டில் விட்டு விட்டு வந்திருக்கின்றனர் போலீஸார்.

●● கோடம்பாக்கம் பள்ளி ஒன்றில் ஒன்பதாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தார்கள் ரமாவும் சுபாஷிணியும். தேர்வு முடிவுகள் வெளிவந்தன. இருவரும் பெயில்! வீட்டுக்குத் தெரிந்தால் திட்டுவார்களே — இனி என்ன செய்வது? எங்காவது ஓடிப் போய் விடலாம் என்று சென்ட்ரலுக்கு வந்திருக்கிறார்கள். டிக்கெட் இல்லாமல் ரயிலில் ஏறி உட்கார்ந்து கொண்டு மேலும் கீழும் விழித்துக் கொண்டிருந்த போது டிக்கெட் பரிசோதகர் பிடித்து ரயில்வே போலீஸிடம் ஒப்படைத்து விட்டார். பெற்றோர்களை அழைத்து வர ஆள் அனுப்பிய போது, அந்த இரண்டு பெண்களும், ''மேடம் எங்க அப்பா அம்மாங்ககிட்ட, நாங்க ஓடி வந்துட்டோம்னு சொல்லாதீங்க; யாரோ எங்களை மடக்கி, கடத்திட்டு வந்துட்டாங்கன்னு சொல்லுங்க. இல்லாட்டி எங்களை அடிச்சுக் கொன்னுடுவாங்க... ப்ளீஸ் அப்படிச் சொல்லுங்க மேடம். இல்லே நாங்க ரயிலுக்குக் குறுக்கே விழுந்து செத்திடுவோம்..'' என்று போலீசையே மிரட்டியிருக்கிறார்கள்!

''ரயில்வே போலீஸ் வருஷத்துக்குக் குறைந்தபட்சம் முப்பது முப்பத்தைந்து பெண்களையாவது பிடித்து ஓடிப் போன கேஸ் ரிக்கார்ட் பண்ணுகிறது. பின்பு அவர்களை விசாரித்து, சொந்த ஊருக்கே அழைத்துச் சென்று பெற்றோர்களிடம் விட்டு விட்டு வருகின்றது. பெற்றோர்களோ, காப்பாளர்களோ இல்லாத பட்சத்தில் அனாதை விடுதிகள், அல்லது பெண்களின் மறுவாழ்வு இல்லங்களில் சேர்பித்து விடுகின்றது'' என்கிறார் எஸ். பி. குணசேகரன்.

''சென்ட்ரல் மற்றும் எக்மோர் ஸ்டேஷன் இரண்டிலும் பிடிபட்டவர்கள் எண்ணிக்கை: 1987ல் 21 பெண்கள், 1988ல் 28 பெண்கள், 1989ல் 29 பெண்கள், இவர்களைப் பிடித்து விசாரித்து, உரிய இடங்களில் சேர்த்துள்ளோம். நான் குறிப்பிட்டுள்ள எண்ணிக்கை போலீஸ் கேஸ் 'ஆக ரிக்கார்ட் ஆனவர்களின் எண்ணிக்கை மட்டும்தான். போலீஸ் கண்களிலேயே படாமல் சாதுரியமாய்த் தப்பித்துப் போகிறவர்களும், பிறர் கையில் மாட்டிக் கொள்கிறவர்களும் உடனே தகவல் அறிந்து வந்து பெற்றோர்களால் அழைத்துச் செல்லப்படுகிறவர்களும் நிறைய உண்டு. இந்தப் பெண்கள் எல்லோரும் பதினைந்து வயது முதல் 23 வயதுக்குட்பட்டவர்கள்தான்'' என்று குறிப்பிட்டார்.

''சோகக் கதையையோ பெரிய கனவையோ சுமந்து கொண்டு ஓடி வருகின்ற பெண்களுள் சினிமா மற்றும் டி. வி. யில் நடிக்க வேண்டும் என்ற ஆசையில் வருகின்றவர்கள் ஐம்பது சதவிகிதம். பெற்றோர்கள் சரியில்லாமல் மிகவும் மோசமான குடும்பச் சூழலின் காரணமாக ஓடி வருகின்ற பெண்களும் காதல் தோல்வியின் காரணமாக ஓடி வருகின்ற பெண்களும்தான் அதிகம்'' என்றார் டெபுடி சூப்பரின்டென்டன்ட் மாரிமுத்து.

இரயில் ஊர்ந்து வந்து பிளாட்பாரத்தில் நின்றதும் குபுகுபுவென்று ஆண்களும் பெண்களுமாய் ஆயிரக்கணக்கான பயணிகள் இறங்கிச் செல்கின்றார்கள். மூட்டை முடிச்சுகள் இறக்குவதிலும் போர்டர்கள் 'கிராக்கி' பிடிக்கப் பறப்பதிலும் பரபரப்பான சூழலில் ஓடி வருகின்ற பெண்களை ரயில்வே போலீஸ் எப்படி அடையாளம் கண்டுபிடிக்கின்றது? — எக்மோர் ரயில்வே போலீஸ் சப்—இன்ஸ்பெக்டர் கமலா கூறினார்:

''ரயில் வந்து நின்றதும் கூட்டம் இறங்கிச் செல்லும். நேரம் ஆக.. ஆக... பிளாட்

00 மகிழ்ச்சி ஒரு பட்டாம்பூச்சியைப் போன்றது. அதைத் துரத்தத் துரத்த நம் கையில் அகப்படாமல் நழுவிப் போகும். நாம் கவனத்தை வேறு பக்கம் திருப்பினாலோ அது தானாகவே வந்து மென்ன நமது தோளில் அமர்ந்து கொள்ளும்.



ஃபாரத்தில் கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறையும். கடைசியாய் ஒரு பெண் மட்டும் நின்று கொண்டிருப்பாள். அவளுக்கு வெளியே போக எது வழி என்று தெரியாது. வெளியே போய் என்ன செய்யப் போகிறோம் என்பதும் தெரியாது. அப்படியே குழம்பிப் போய் நிற்பாள். நாங்கள் ரவுண்ட்ஸ் போகிறப்ப 'பளிச்'சென்று இது எங்கள் கண்ணில் படும். இல்லாவிட்டால் போர்டர்கள் எங்களிடம் வந்து தகவல் சொல்லுவார்கள்.

"யாரும்மா நீ? ஏன் இங்கேயே நின்னுட்டு இருக்கே? என்று கேட்டதும் முக மாற்றமும் பீதி கலந்த பதற்றமும் அவளைக் காட்டிக் கொடுத்து விடும். கையில் சின்னதாக ஒரு ஒயர் கூடை இருக்கும். அதற்குள் சினிமாப் பத்திரிகைகளிலிருந்து வெட்டி எடுக்கப்பட்ட ரஜினிகாந்த், விஜய்காந்த், சிரஞ்சீவி, பாரதிராஜா — இவர்களுடைய வீட்டு விலாசங்கள். இரண்டு மூன்று செட் மாற்று உடைகள், பவுடர், கண் மை, வாசனை கூந்தல் தைலம், ஃபேர் அன் லவ்லி (தவறாமல்) லிப்ஸ்டிக் (ஆந்திரா பெண்கள் மட்டும்) இத்தியாதி இருக்கும். அத்துடன் பாஸ்போர்ட் சைஸ் போட்டோவும் வைத்திருப்பார்கள். சினிமா ஆசை இல்லாது மற்ற காரணங்களுக்காக ஓடி வருகின்ற பெண்களிடம் செத்துப் போன அம்மாவின் போட்டோ, காதலன் போட்டோ, கொலுசு, தோடு, மூக்குத்தி என்று ஒவ்வொருவரிடம் ஒவ்வொரு விதமான பொருட்கள் இருக்கும்.

"அவர்களை விசாரித்து முழு விவரங்கள் அறிந்து கொள்வதற்குள் உயிரே போய் விடும். எதற்கெடுத்தாலும் அழ ஆரம்பித்து விடுவார்கள். சில பெண்கள் "நான் என்ன தப்புப் பண்ணினேன்னு என்னைத் துருவித் துருவி விசாரிக்கிறீங்க!' எங்க ரிலேஷன் ஒருத்தர் விஜய்காந்த் வீட்டுல வேலை பார்க்கிறார். அவர்தான் என்னை வரச் சொன்னார்..." இப்படி எதையாவது கூறிச் சீறுவார்கள். விசாரித்துப் பார்த்தால் அவர்கள் சொல்லுகின்ற மாதிரி யாரும் இருக்கவே மாட்டார்கள். சற்று கடுமையாக முகத்தை வைத்துக் கொண்டு 'போலீஸ்தனமாக விசாரித்தால்தான்' உண்மை வெளிவரும்."

"போலீஸ் தனம் என்றால் அடிப்பீங்களா?" என்று கேட்டோம் எஸ். ஐ. கமலாவிடம்.

"முடியாது சார்! அந்தப் பொண்ணுங்களைப் பார்த்தா யாருக்குமே அடிக்க மனசு வராது. பார்க்கவே பாவமா வெகுளியா இருப்பாங்க. ஆனா ரொம்ப அழகா இருக்குங்க. சினிமா ஸ்டார் போலவேதான் இருப்பாங்க. இப்படி விவரம் தெரியாம வந்து சீரழிஞ்சு போகப் போவுதேன்னு கோபம் தான் வரும். மிரட்டி விசாரிப்போம்.

"இதில் ஒரு கொடுமை என்னவென்றால் இந்தப் பெண்கள் திரும்ப ஊருக்குப் போகவே மாட்டேன் என்று அடம்பிடிக்கிறாங்க. 'மேடம்! என்னை என்ன வேண்டுமானாலும் செய்யுங்க. ஊர்ல மட்டும் கொண்டு போய் விட்டுடாதீங்க'ன்னு கெஞ்சுறாங்க. திரும்ப ஊருக்குப் போனா அவமானமாச்சேன்னு பயம்! பெண்ணுக்குப் பெற்றோர்கள் இருந்தால் நாங்கள் இரண்டு பெண் கான்ஸ்டபிள்களைத் துணைக்கு அனுப்பி, வீட்டில் கொண்டு விட்டுட்டு வந்திடுவோம்" என்று முடித்தார் எஸ். ஐ. கமலா.

"சில பெண்களை உரிய இடத்தில் உடனே சேர்ப்பித்து விட முடியாது. இரண்டு மூன்று நாட்கள் கூடத் தாமதம் ஏற்படும். அந்தச் சூழ்நிலையில் அந்தப் பெண்களுடனே பெண் போலீஸும் தங்கியிருக்க நேரும். அந்த நேரத்தில்தான் அவர்களுக்குள் ஒரு சிநேகம் மலர்ந்து விடுகின்றது. அப்போது அவர்கள் எதையுமே மறைக்காமல் அப்படியே மனத்தைத் திறந்து கொட்டி விடுகின்றார்கள். அந்தப் பிஞ்சு உள்ளங்களில், வெள்ளை மனசில்தான் எத்தனை சிவப்புக் கறைகள்! ஒவ்வொரு பெண்ணும் கூறுகின்ற கதைகள் அப்படியே ஆளை உலுக்கி விடுகின்றன. கடவுளே! இப்படிக் கூட நடக்குமா என்று பிரமிப்பாகி விடும். பதினாறு, பதினேழு வயதிலே அவர்களின் வாழ்க்கையில் நேர்ந்திருக்கின்ற கோரமான சம்பவங்களும், தகுதிக்கு மீறிச் சுமக்கத் துவங்கிய கனவுகளின் அழுத்தமும் தாம் இவர்களின் இயல்பான வாழ்க்கை ஓட்டத்தினைத் தடம் புரளச் செய்து விடுகின்றன" என்று சென்ட்ரல் ஸ்டேஷன் ஹெட் கான்ஸ்டபிள் இமாக்குலேட் சொன்ன போது மனம் கனத்துப் போனது.

(உண்மைக் கதைகளில் வரும் பெயர்கள் மட்டும் மாற்றப்பட்டுள்ளன).

— பாரதிபாலன்

படங்கள்: ஸ்ரீஹரி

00 காதல் என்பது கனவல்ல; காதல் என்பது க்ஷண நேரத்துச் சரீர சுகமும் அல்ல. காதல் என்பது இரண்டு மனங்களின் சேர்க்கை. இரண்டு அபூர்ண மனிதர்களுக்கு, ஒருவரை ஒருவர் பூர்ணமாக்குவதற்காக ஒரு விசித்திரமான தவிப்பு உண்டாகிறதே, அதன் பெயர்தான் காதல்!

— காண்டேகர்.

நீதிமன்றம்.

கட்டிடத்தைச் சுற்றிலும் இருந்த மர நிழல்களில் நின்ற ஏராள மக்கள் மத்தியில், அங்கங்கே அரவிந்த் நிறுவனத் தொழிலாளிகளும் நிறையப் பேர் வந்திருந்தார்கள்.

நீதிமன்றத்தில் பார்வையாளர்கள் பகுதியில் கோபியும், சிவராமும் அமர்ந்திருக்க, ஓரமாய் இருந்த ஒரு பெஞ்சில் வந்தனா கைகளைக் கட்டிக் கொண்டு அமர்ந்திருப்பதை அத்தனை ஜோடிக் கண்களும் நிமிடத்திற்கொரு முறை பார்த்துப் பார்த்து விலகின.

நீதிபதி சில வழக்குகளை ஒத்திப் போட்டு விட்டு இந்த வழக்கிற்கு வந்து, பெயர் அழைக்கப்பட்ட பிறகு அரவிந்த் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டான்.

அரவிந்த் முகத்தைப் பார்த்த வந்தனாவிற்கு லேசான அதிர்ச்சியாக இருந்தது.

அரவிந்த் ஒருமுறை அவளைப் பார்க்க, அவசரமாகத் தன் பார்வையை நகர்த்திக் கொண்டாள் வந்தனா.

அரசாங்க வக்கீலின் முதுகு, மிக அகலமாக — அகன்ற மார்பை உணர்த்துவதாக இருந்தது.

நீதிபதி தண்ணீர் கிளாஸ் எடுத்துக் கொஞ்சம் குடித்துவிட்டு, வைத்து விட்டு, கைக்குட்டையால் நளினமாகத் தம் உதடுகளை ஒற்றிக் கொண்டு, அரசாங்க வக்கீலிடம் இந்த வழக்கின் சுருக்கத்தை உரைக்கச் சொன்னதும், இவர் இலேசாகச் செருமிக் கொண்டார்.

''கனம் நீதிபதி அவர்களே... இவர் தொழிலதிபர் அரவிந்த். இவரிடம் இவர் அலுவலகத்தில் வேலை பார்த்த பெண் வந்தனா திருமணமாகாதவர். சம்பவ தினத்தன்று வேலையை ராஜினாமா செய்திருந்த வந்தனாவை இவர் பொய்யான ஒரு காரணம் கூறித் தமது வீட்டிற்கு வரவழைத்திருக்கிறார். இவர் வார்த்தையை நம்பி வந்த வந்தனாவைத் தவறான நோக்கத்தோடு கட்டியணைத்து முத்தமிட்டுப் பலவந்தப் படுத்த முயன்றிருக்கிறார். யதேச்சையாக அங்கே வந்த வந்தனாவின் அண்ணன் மயக்கத்தில் இருந்த வந்தனாவை அவசர சிகிச்சைக்காக ஒரு தனியார் ஆஸ்பத்திரியில் சேர்த்தார். உணர்வு திரும்பிய பிறகு வந்தனா புகார் கொடுத்ததன் பேரில் அரவிந்த் கைது செய்யப்பட்டு, பிறகு ஜாமீனில் விடப்பட்டு, இந்த வழக்கு தொடரப்பட்டுள்ளது. இந்தக் குற்றச்சாட்டை வழக்கின் விரிவான விசாரணைகளில் சாட்சிகள் மற்றும் ஆதாரங்களோடு நிரூபிக்க இருக்கிறேன்.''

நீதிபதி தமது வழுக்கைத் தலையை இடது கையால் ஒருமுறை லேசாகத் தடவி விட்டுக் கொண்டு நிமிர்ந்து அரவிந்தைப் பார்த்தார்.

''அரவிந்த், வக்கீல் சொன்னதைக் கேட்டீங்களா? உங்க மேலே சொன்ன குற்றச் சாட்டைப் பத்தி என்ன சொல்றீங்க?''

உதடுகள் துடிக்க, ஈரக் கண்களுடன் ஒரு முறை வந்தனாவைப் பார்த்துவிட்டு, நீதிபதியைப் பார்த்தான்.

''சொன்ன நிகழ்ச்சி உண்மைதான் சார். ஆனா நோக்கம் தப்பு. நான் வந்தனாவை உயிருக்குயிரா நேசிச்சேன். இப்பவும் நேசிக்கிறேன். ஆனா அதை அவங்க புரிஞ்சுக்கலை. மனம் விட்டுப் பேசிப் புரிய வைக்கிறதுக்காகத்தான் நான் வரவழைச்சேன். அந்தச் சமயம் நான் குடிச்சிருந்ததினால என் நிலை இழந்திருந்தேன். அதனாலே கொஞ்சம் அத்து மீறிட்டேன். ஆனா பலவந்தப்படுத்தற நோக்கத்திலே இல்லை — என் காதலைப் புரிய வைக்கணும்ங்கிற நோக்கத்திலதான். ஆனா, சட்டப்படி அது தப்புதான்னு ஒப்புக்கிறேன். நான் செய்தது சரின்னு சொல்லத் தயாரில்லை.''

''உங்களுக்காக வாதாடப் போற வக்கீல் யாரு?''

''யாருமில்லை சார். நான் எந்த வக்கீலையும் நியமிக்கலை.''

''ஏன்?''

''நான் நடந்துக்கிட்டதுக்கான நோக்கம் எனக்கு நியாயமா இருக்கலாம். ஆனா சட்டப்படி தப்புதான். அதை வக்கீல் வச்சி வாதம் செஞ்சி மாத்த விரும்பலை.''

''வக்கீலை நியமிச்சிக்கிறதுக்கு உங்களுக்கு உரிமை இருக்கு. நீங்க விரும்பினா உங்களுக்கு அவகாசம் தந்து வழக்கை ஒத்தி வைக்க முடியும்.''

''வேணாம் சார். அந்த உரிமையை நான் பயன்படுத்தலை.''

''உங்க செயலோட சூழ்நிலை, நோக்கத்தைத் தெளிவுபடுத்தறதுக்காகவாவது உங்க

# வல்லமை தாராயோ?



பட்டுக்கோட்டை பிரபாகர்

ளுக்கு ஒரு வக்கில் தேவைப்படலாம். விரும்பினா அரசாங்கமே உங்களுக்கு வக்கில் நியமிக்கிற வாய்ப்புகூட இருக்கு.''

''மன்னிக்கணும் சார். அந்த வாய்ப்பை எல்லாம் நான் பயன்படுத்த விரும்பலை. இப்ப சொன்னதுதான் என் விளக்கம். மத்தபடி அது குற்றம்தான்னு நான் ஒப்புக்கறேன். சட்டப்படி என்ன தண்டனை உண்டோ அதை ஏத்துக்கத் தயாரா இருக்கேன்.''

நீதிபதி பெருமூச்சு விட்டு, பப்ளிக் பிராசிகியூட்டரைப் பார்த்து, 'கொஞ்சம் விசித்திரமாத்தான் இருக்கு' என்று ஆங்கிலத்தில் முணுமுணுத்தார்.

''அந்தப் பொண்ணு வந்தனா வந்திருக்காங்களா?''

''ஆமாம் சார்.''

''அவங்க கருத்தைக் கேட்டுடறேன். அதுக்கப்புறம் முறையா நீங்க வழக்கு விசாரணையை ஆரம்பிக்கலாம்.''

வந்தனா அழைக்கப்பட்டு, எழுந்து முந்தானையைச் சரி செய்து கொண்டு நடந்து விசாரணைக் கூண்டுக்குள் வந்து நின்றாள்.

நீதிபதி அவளைச் சில விநாடிகள் பார்த்துவிட்டு, ''வந்தனா, போலீசுக்கு நீங்கள் கொடுத்த குற்றச்சாட்டின் அடிப்படையிலதான் இந்த வழக்கு நகரணும். அந்தக் குற்றச்சாட்டை ஒரு தடவை வாய்மொழியாக இங்கே சொல்விடுங்க'' என்றார்.

வந்தனா சில விநாடிகள் மௌனமாக இருந்துவிட்டு, எச்சில் விழுங்கினாள், தயங்கினாள்.

''என்னம்மா? எதுவா இருந்தாலும் தயங்காமச் சொல்லுங்க.''

''வந்து... நான் சில உண்மைகளைச் சொல்லிடறேன். அரவிந்த் அலுவலகத்திலே வேலை பார்த்த என்னைக் கூப்பிட்டு என்னை நேசிக்கிறதாச் சொன்னார். எனக்கு அந்த எண்ணம் இல்லை. அதனால வேலையை ராஜினாமாச் செய்துட்டேன். சம்பவ தினத்திலே என்னை போன் செய்து வரவழைச்சப்போ அரவிந்த் குடிச்சிருந்தார். ஆனா குடி போதையிலேயும் நிதானமாத்தான் இருந்தார். தம் காதலை மறுபடி சொன்னார். தன்னை ஏத்துக்கச் சொல்லி வற்புறுத்திப் பேசினார். இதுக்குத்தான் என்னை இந்த ராத்திரில கூப்பிட்டு அனுப்பினாரான்னு எனக்குக் கோபமா வந்துச்சி. விருட்டுன்னு ஆத்திரமாப் புறப்பட்டு வெளியேறினேன். பொய்யா இவர் மேலே புகார் கொடுக்கணும்னு எனக்கு ஒரு கோபம் ஏற்பட்டதால நான் போலீஸ் ஸ்டேஷன் வந்து என்னைப் பலவந்தப்படுத்த முயற்சி செஞ்சதாப் புகார் கொடுத்துட்டேன். ஆனா அவர் என்கிட்டே முரட்டுத்தனமா தம் காதலைப் பத்திப் பேசினாரேயொழிய என்னைத் தொடவே இல்லை.''

கோர்ட் மொத்தமும் அதிர்ச்சியடைந்தது.

அரவிந்த் எதுவும் புரியாமல் திகைப்புடன் அவளைப் பார்த்தான். சிவராம், கோபி முகங்கள் பிரகாசமாகி ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

''நீதிபதி அவர்களே, இப்படிப் பொய்யாக் குற்றச்சாட்டுக் கொடுத்து அவர் பேரை ரிப்பேர் செய்துட்டதுக்காகவும், கோர்ட் நேரத்தை விணடிச்சிட்டதுக்காகவும் நான் பகிரங்கமா மன்னிப்புக் கேட்டுக்கிறேன். இப்படிப் பொய்க் குற்றச்சாட்டுக் கொடுத்தது சட்டப்படி தப்புன்னா அதுக்கான தண்டனையை ஏத்துக்கறேன். என் தனிப்பட்ட ஆத்திர உணர்ச்சி காரணமா அவசரப்பட்டுச் செயல்பட்டுட்டேன்.''

கோர்ட் முழுக்க சளசளத்தது. நீதிபதி 'கேவல்' எடுத்து மேஜையைத் தட்டி அமைதியை உண்டாக்க வேண்டியிருந்தது.

அதன் பிறகு நீதிபதி அவளை அரை மணி நேரம் கேள்விகள் கேட்டு, பிறகு, ''எடுத்துக் கொண்ட வழக்கு வந்தனாவின் இமர் வாக்குமூலத்தால் திசை மாறியிருக்கிறது. இந்த வழக்கைக் கைவிடலாமா, வந்தனாவின் பொறுப்பற்ற செயலுக்குச் சட்டப்படி வழங்க வேண்டிய தண்டனை என்ன என்பவற்றை ஆலோசித்து முடிவு செய்ய வேண்டியிருப்பதால் இவ்வழக்கை மறு தேதிக்கு ஒத்திப் போடுகிறேன்,'' என்றார்.

கோர்ட் வேறு ஒரு வழக்குக்கு மாற... வந்தனா வெளியில் வந்து நடக்க... சிவராம



னும், கோபியும் அவளிடம் வந்தார்கள்.

"அம்மா, நீ இப்படி மனம் மாறு வேன்னு நினைக்கவே இல்லைம்மா. ரொம்ப தேங்ஸ். என் தம்பி மேல உள்ள பழியைத் துடைக்கப் போய் இப்போ உன் மேலே ஒரு புதுப் பழி வந்துடுச்சி — பொய்க் குற்றச்சாட்டுக் கொடுத்ததா. உனக்காக நான் வக்கீல் ஏற்பாடு பண்றேன். வெறும் அபராதம் மட்டும் தண்டனையா விதிக்கிற மாதிரி திறமையா வாதாடச் சொல்றேன். அந்த அபராதத் தொகையையும் நானே கட்டிடறேன்,'' என்றார் சிவராமன் நெகிழ் வோடு.

மூவருமாக நடந்து ஒரு மர நிழலுக்கு வர...

அரவிந்த் மெதுவாக நடந்து வந்தான். அவனை நிமிர்ந்து பார்த்த வந்தனா தலையைக் குனிந்து கொண்டாள்.

''ரொம்ப நன்றின்னு சொல்ல விரும்ப லைங்க வந்தனா. ஏன் அப்படிப் பொய் சொன்னீங்க? நடந்தது உண்மைதான். நான் தண்டிக்கப்படணும்னு நீங்க விரும்பினதும் உண்மைதான். பின்னே, ஏன்?'' என்றான் அரவிந்த்.

சற்று மௌனமாக இருந்த வந்தனா சொன்னாள்:

''உங்களை வெறுக்க உங்க செயல்கள் மட்டும் காரணமில்லை — என் மனசில நான் வகுத்துக்கிட்ட சில இலக்கணங்களும் ஒரு காரணம். பொதுவா ஆண்கள் எல் லாரும் சந்தர்ப்பம் கிடைக்கிறப்ப எல்லாம் பெண்களை அடக்கி, ஒடுக்கி அடிமைப் படுத்த நினைக்கிறவங்கன்னு நான் அழுத் தமா நினைச்ச நினைப்புதான் என்னை உங்களோட ஒட்ட விடலை. நீங்க என்னை நேசிக்கிறதாச் சொன்னதுமே எனக்குச் சந்தேகமும், எரிச்சலும்தான் ஏற்பட்டது. அந்தச் சம்பவம் இன்னும் நெருப்பைத் தூண்டி விட்டது. ஆனால் உங்க அன்பு அழுத்தந்திருத்தமானதுன்னு நிரூபிச்சிட் டீங்க. நிறுவனம் எப்படிப் போனாலும் சரி, உங்க பேர் எப்படிக் கெட்டுப் போனாலும் சரி, தப்புக்கான தண்டனையை அனுப விச்சே தீர்றதுன்னு நீங்க காட்டின பிடி வாதத்துக்குப் பின்னால ஏதோ சதி இருக் கோன்னு நினைச்சேன். அந்த எண்ணம் அப்பழுக்கில்லாததுன்னு புரிஞ்சப்போ என் மனசு மாறிடுச்சு...

''பொதுவாகப் பெண்கள் நிமிர்ந்து நிக் கணும், தங்கள் உரிமைகளுக்காகப் பயப் படாம போராடணும்னு தீவிரமா சிந்திக் கிறவ நான். அப்படி முறைகேடா நீங்க என் கிட்டே நடந்துக்கிட்டதும் நான் இதை விடக் கூடாதுன்னு தீவிரமா உங்களை எதிர்த்துப் போராடினேன். ஆண்கள் சமுதாயத்தைப் பூரா எதிர்க்கிறதா எனக்குள்ளே ஒரு பெரு மிதமான சுகம் இருந்தது. யார் சொன்னா லும் கேக்காம என் மனசுக்கு நியாயமாப் பட்டபடி நடக்கிற வல்லமை எனக்கு இருந் துச்சு. ஆனால் நியாயமான காரணத்துக் காக என்னை மாத்திக்கிற வல்லமை எனக்கு இப்பத்தான் வந்திருக்கு...''

என்ன பேசுவது என்று தெரியாமல் கைகளைக் கட்டிக் கொண்டு அமைதியாக நின்றான் அரவிந்த். அவன் முகம் பூரிப்பில் சற்றுப் பெரிதாகி, உதடுகள் வார்த்தைகளுக் காகத் தவித்துக் கொண்டிருந்தன.

''ஆக... அரவிந்த் செய்த தப்புக்கு என்ன தண்டனை கிடைச்சாலும் அதை அனுபவிக் கத் தயாரா இருந்தார்ங்கிறதை முழுமன சோட இப்பவாவது நம்புறியா?'' என்றான் கோபி.

மௌனமாகத் தலையசைத்தாள்.

''ஆக... அரவிந்த் கோர்ட்ல சொன் னாரே, உன்னை உயிருக்குயிரா இப்பவும் நேசிக்கிறதா, அதையும் முழுமனசோட இப்ப வாவது நம்புறியா?''

மௌனமாக நின்ற வந்தனாவின் தலை மிக மெதுவாக அசைந்து, அவள் நிமிர்ந்த போது உதடுகளில் கீற்றாக ஒரு புன்னகை படர்ந்தது; கண்களில் பனித்திரை.

''நீ வெட்கப்பட்டுச் சத்தியமா நான் இப்பதான் முதல் முறையாப் பார்க்கிறேன், வந்தனா! கங்கிராஜுலேஷன்ஸ் சார்'' என்று அரவிந்தின் கையைப் பற்றிக் குலுக் கினான் கோபி.



(முற்றும்)

ஏப்ரல் - 14
பொறுத்திருந்ததற்கு
பலன் கிடைக்கும் நாள்.





# மகத்தான ஓர் எதிர்காலத்தை ஸ்ரீராம் சிட்ஸ் உங்களுக்கு வழங்குகிறது !

## மற்றும் இலவசப் பரிசுகளையும் கூட!

| சீட்டின் மதிப்பு | உறுப்பினர் பரிசு |
|---|---|
| 1. ரூ. 200 x 30 = 6,000 | "க்ளாஸிக்" பிளாஸ்க். |
| 2. ரூ. 250 x 40 = 10,000 | 5 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 3. ரூ. 500 x 30 = 15,000 | மாடர்ன் காசரோல் |
| 4. ரூ. 625 x 40 = 25,000 | தெர்மோ-பேக் லஞ்ச் பாக்ஸ் |
| 5. ரூ. 500 x 60 = 30,000 | ஹால்மார்க் பிரஸ் பாட்டம் குக்கர். |
| 6. ரூ. 1,000 x 50 = 50,000 | கானி ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டின்னர் செட்- 18 எண்ணிக்கை. |
| 7. ரூ. 1,250 x 60 = 75,000 | ஆய்ஸ்டர் ஆனோடைஸ்டு கடாய் |
| 8. ரூ. 1,000 x 100<br>ரூ. 2,500 x 40 = 1,00,000 | மில்டன் 3-in-1 கேசரோல் |
| 9. ரூ. 4,000 x 50 = 2,00,000 | 20 கிராம் வெள்ளிப் பதக்கம் - மூன்று. |
| 10. ரூ. 10,000 x 50 = 5,00,000 | லக்ஷ்மி திருஉரு பதித்த 4 கிராம் தங்கப் பதக்கம் |




அறிமுகப்படுத்துபவருக்கான பரிசு உறுப்பினருக்கு மட்டுமே!



ஸ்ரீராம் சிட்ஸ் — வளமான எதிர்காலத்துக்கு வழி

## தமிழ் புத்தாண்டு இலவசப் பரிசு விழா!

தமிழ் புத்தாண்டு நாளன்று, ஸ்ரீராம் சிட்ஸ் உங்களுக்கு வழங்குவது வெறும் மகத்தான எதிர்காலம் மட்டுமல்ல கண்கவர் பரிசுகளும் கூட!

ஏப்ரல் 14 அன்று ஸ்ரீராம் சிட்ஸ் நிறுவனத்துக்கு வருகை தாருங்கள். உங்களின் விருப்பத்திற்கேற்ப ஏதாவது ஒரு பிரிவு சீட்டில் சேருங்கள். வியக்க வைக்கும் இலவசப் பரிசொன்றை உங்கள் இல்லத்திற்கு எடுத்துச் செல்லுங்கள். மறவாதீர் — ஏப்ரல் 14, காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை.

**சிறப்புச் சலுகைகள் :** ரூ.50,000 வரையிலான சீட்டு குரூப்புகளில் பணம் எடுக்க தக்க வருவாய் உள்ள 3 தனிநபர் உத்திரவாதம் இருந்தால் போதும். வேலையில் இருக்கும் பெண்மணிகளுக்கு ரூ.15,000 வரையிலான சீட்டு குரூப்புகளில் கணவரது உத்திரவாதம் இருந்தால் போதும்.

ஸ்ரீராம் சிட்ஸ் 1,60,000 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு மகத்தான மக்கள் இயக்கமாக எப்படி இன்று வளர்ந்திருக்கிறது என்பது, அவர்கள் செலுத்துகிற ஏலத் தொகை மூலம் வருடாந்திரப் பணம் புழக்கமாக 120 கோடி ரூபாயையும் 42 கிளைகளையும் பெற்றிருக்கிறது என்பது இன்னுமா உங்களை வியக்க வைக்கிறது?.

**• 14-4-90 அன்று பல புதிய கிளைகள் திறப்பு விழா!**
குண்டூர், கோயம்புத்தூர் II மற்றும் சென்னை அண்ணாசாலை III, அடையார் II, ஜார்ஜ் டவுன் II.

| அறிமுகப்படுத்துபவர் பரிசு |
| --- |
| 1. ஸ்ரீபெட் வாட்டர் பாட்டில்கள் - இரண்டு. |
| 2. மில்டன் ஏர்டைட் பட்டர்ஃபிளை செட். |
| 3. மில்டன் ட்ரெஷர் ட்ரே |
| 4. சித்தார்த்த பாசுவின் 'தி இன்டியா க்விஸ் புக்' |
| 5. ஸா குயலா டென்வெஸ்ட் பென்ஸில் - மூன்று. |
| 6. கூல் ஸ்டார் ஜுக் |
| 7. ஹால்மார்க் பிரஷ் பாட்டம் டோப் |
| 8. ஸா குயலா வெஜிடபிள் பென்ஸில் - மூன்று. |
| 9. 20 கிராம் வெள்ளிப் பதக்கம் - ஒன்று |
| 10. ஹிட்லர் புன்னர் செட் - 18 எண்ணிக்கை |

புதிய கிளை திறப்பு விழா அன்று அங்கு வருகைதரும் குழந்தைகளுக்கு ஒரு ஸ்ரீபெட் பாட்டில் பரிசாக அளிக்கப்படும்.

வாருங்கள்! மகத்தான இந்த மக்கள் இயக்கத்தில் இணைந்து கொள்ளுங்கள்!

எங்கள் கிளைகளில் உள்ள ஏஜெண்டுகளை/ டெவலப்மெண்ட் ஆபிஸர்களை/ ரெசிடெண்டு மேனேஜர்களை தொடர்பு கொள்க.




**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி.லிமிடெட்.**

நிர்வாக அலுவலகம்: ''சுப்ரமணியன் பில்டிங்'',
1, கிளப் ஹவுஸ் சாலை, சென்னை-2.
போன்: 474451/475536/
470400/473932.

**All India Deposit Mobilisation Campaign till 30.4.90.**

ADWAVE/SCH/4010 TAM A

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஏ. சண்முகசுந்தரம்,
37, நேரு தெரு,
சிட்லபாக்கம்,
சென்னை — 64.

* கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.

? 'ஏழையின் சிரிப்பில் போதையைக் காண்போம்' என்ற கல்கி தலையங்கத்துக்கு சின்னக் குத்தூசி அளித்துள்ள விளக்கம் பற்றி?

! அவர் கடமையை அவர் செய்கிறார். நமக்கு அதில் ஆட்சேபம் கிடையாது. நாளைக்கே கலைஞர் பூரண மதுவிலக்கைத் தமிழகத்தில் தீவிரமாக அமுல்படுத்தினால், மதுவிலக்கின் மகிமைகளைச் சின்னக் குத்தூசியார் இதைவிடச் சிறப்பாக விளக்கு வார்!

* சி. மகேஷ், மதுரை.

? ஒரு 'சிதம்பர ரகசியம்' சொல்லுங்களேன்?

! தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்குத் தம் பெயர் வைக்க வேண்டும் என்று புலவர், கவிஞர் மன்ற அமைப்புக்களைத் தீர்மானம் நிறைவேற்றச் சொல்லிக் கொண்டிருக்கிறாராம் ஒரு த. இ. த.!

* வி. ராதா கிருஷ்ணன், திருச்சி.

? தபால் கட்டண உயர்வு எழுத்தாளனை முடக்கி விடுமா?

! முடக்கி விட வேண்டாம்; ஆனால் யோசிக்க வைத்தால் நல்லது — எழுது வதற்கு முன்னும் எழுதியதை அனுப்பு வதற்கு முன்னாலும்!

* ஜெயப்பிரியா, சீர்காழி.

? பட்ஜெட் விளக்கப் பொதுக் கூட்டம் தமிழகம் முழுவதும் நடத்தப்படும் என்று அன்பழகன் அறிவித்துள்ளாரே?

! அப்படி விளக்கும்படியான குழப்பம் ஒன்றும் அதில் இருப்பதாகத் தெரியவில்லையே! இவை மலிவு விலை மது கொண்டு வரப்படுவதற்குக் காரணங்களைப் பட்டிய லிடும் பிரசாரக் கூட்டங்களாக மாறினால் வியப்பதற்கில்லை. தாய்மார்கள் ஏமாறப் போவதுமில்லை.

* ஆர். அப்துல்சலாம், திருச்சி.

? காஷ்மீர் விவகாரத்தைக் கவனித்துக் கொள்ளும் கூடுதல் பொறுப்பு ஜார்ஜ் ஃபெர்னாண்டஸுக்கு வழங்கப்பட்டிருப்பது எதைக் காட்டுகிறது?

! 'எதைத் தின்றால் பித்தம் தெளியும்' என்று மத்திய அரசு தவிப்பதைத்தான்!

* கே. அருணாசலம், தென்காசி.

? தபால் கட்டண உயர்விலிருந்து தப்பிய தபால் அட்டை பற்றி...?

! அதனை அந்தவிலையிலேயே தொடர்ந்து நஷ்டத்தில் வழங்கும் வசதிக்காகத்தான் மற்ற தபால் கட்டணங்கள் உயர்த்தப் பட்டுள்ளன.

* உஷா கிருஷ்ணமூர்த்தி, சென்னை — 63.

? வள்ளுவருக்கு 133 அடி உயர சிலையா?

! வள்ளுவத்தைக் கடைப்பிடித்து ஆட்சி நடத்துவது சிலை வைக்கும் சடங்கை விடச் சிறந்தது.

* சாவிசத்யா, சென்னை — 93.

? "இருட்டுக்குள் நிற்கிறேன், எந்த திசையில் செல்வதென்று தெரியவில்லை" என ஆர். எம். வீ. கூறியுள்ளாரே?

! ஆக, வேறு திசையில், செல்லத் தயாராய் இருப்பதாகக் கோடி காட்டி விட்டார். தேவை ஒரு சிக்னல்தான்!

* ஏ. சண்முகசுந்தரம், சென்னை — 64 *

? "பெட்ரோல் விலை ஏற்றத்துடன் ரேஷனும் வரக்கூடும்" என்று வி. பி. சிங் எச்சரித்துள்ளாரே?

! நோயைவிட அதைக் குணப்படுத்த மேற்கொள்ளப்படும் இந்த வைத்தியம் மோசமானது. கள்ள மார்க்கெட் தலைவிரித்தாடும். தங்கக் கட்டுப்பாட்டை நீக்கிய புத்திசாலித்தனம், இந்த முட்டாள்தனத்துக்கு இடம் தரலாமா?

# அதிர்ச்சி நிபுணர் தேவிலால் அடக்கி வாசிப்பாரா?

* கிஷோர், திருச்சி.

? இந்திய மக்களைத் தான் தொடர்ந்து நேசிப்பதாக நெடுமாறனிடம் பிரபாகரன் சொன்னாராமே?

! "தொடர்ந்து" என்ற சொல்லில் தாம் பெருந்தன்மை காட்டுவதாக உணர்த்தியிருக்கிறார். நம்மை நேசிப்பதைவிட அதிகமாக அவர் சிங்களவரையும் ஜனநாயகத்தையும் நேசிக்கக் கற்றுக் கொண்டால், தனிச் சுதந்திர ஈழத்தையும், அதை அடைய ஆயுத பலத்தையும் குறைவாக நேசிக்கப் பழகிக் கொண்டால் உண்மையிலேயே பெருந்தன்மை காட்டியவராவார்.

* கே. ரமேஷ்ராம், செங்குன்றம்.

? கோவாவில் ஏற்பட்டிருக்கும் அரசியல் மாற்றம் குறித்து?

! கோவாவிலும் சரி, மேகாலயாவிலும் சரி, காங்கிரஸ் கட்சிக்குள் நிலவிய உட்பூசலே காங்கிரஸ் ஆட்சி கவிழ்ந்ததற்குக் காரணம். காங்கிரஸின் மத்திய தலைமையில் காங்கிரஸ்காரர்களுக்கு நம்பிக்கை குறைந்து கொண்டே வருகிறது என்பதற்கும் ராஜீவால் தமது கட்சிக்காரர்களை ஒரு கட்டுப்பாட்டில் வைத்திருக்க முடியவில்லை என்பதற்கும் மேலும் இரு வலுவான சாட்சியங்கள்.

* கே. ரமேஷ், சென்னை — 28.

? தமிழ்நாடு ஆம்னிபஸ் உரிமையாளர்கள் சங்கம் வெளியிட்டுள்ள வேண்டுகோளில் முதல்வரைக் குறிப்பிடுகையில், "பாத மலர்களைத் தொட்டு", "தெய்வமாக நம்பி" என்றெல்லாம் சொற்களை உபயோகித்திருக்கிறார்களே...?

! முதல்வர் இதையெல்லாம் எதிர்பார்க்க ஆரம்பித்து விட்டார் போலிருக்கிறது? அதனால்தான் இப்படி நடந்து கொள்கிறார்கள்!" என்னை வழியனுப்ப விமான நிலையம் வந்து நேரத்தை வீணடிக்க வேண்டாம்" என்று அமைச்சர்களுக்குச் சுற்றறிக்கை அனுப்புகிறாரே பிரதமர், அப்படி நமது முதல்வரும் நடந்து கொண்டால் இப்படிப்பட்ட முதுகெலும்பிழந்த நாடகங்களும் நடக்காது.

* ஆர். எஸ். நாராயணன், சென்னை.

? சூரிய ஒளியிலிருந்து மின்சாரம் தயாரிக்கத் தீவிரமாக முயற்சி செய்யலாமல்லவா?

! செய்யாமல் இருப்பார்களா? இப்போது நடக்கும் ஆராய்ச்சியெல்லாம் (அமெரிக்காவில்) சூரிய ஒளியிலிருந்து மின்சாரத் தயாரிப்பை எப்படி மேலும் மலிவாக்கலாம் என்பது குறித்துத்தான். மலிவாகத் தயாரிக்க முடிந்து விட்டால் பிறகு, இப்போதுள்ள, மக்களுக்குத் தீங்கு விளைவிக்கிற, அனல் மின் நிலையம் — அணுமின் நிலையம் இரண்டுக்கும் டாட்டா சொல்லி விடுவார்கள்.

* ஜி. வி. எஸ். மணியன், திண்டுக்கல்.

? அதிர்ச்சி வைத்திய நிபுணர் தேவிலால் இனி அடக்கி வாசிப்பாரா?

! அஜித்சிங்கை இவர் பதவி நீக்கம் செய்ததை அஜித்சிங்கே லட்சியம் பண்ணவில்லை என்பதையும் அஜித்துக்குப் பதிலாக இவரால் நியமிக்கப்பட்டவர் அந்தப் பதவியை ஏற்கவில்லை என்பதையும் பார்க்கும் போது இனியேனும் அடக்கி வாசித்தால் தான் நல்லது என்பது நமக்குப் புரிகிறது. தேவிலாலுக்குப் புரிய வேண்டுமே?

* வசந்தா காந்த், கருப்பம்புலம்.

? ஆற்காடு வீராசாமியின் ராஜினாமா நாடகம் பற்றி....?

! இத்தனை ஆர்ப்பாட்டத்துக்குப் பிறகு கண் பார்வையில் கோளாறுதான் ராஜினாமாவுக்கு உண்மைக் காரணம் என்று நாம் நம்பினால், நம் பார்வையிலும் கோளாறு என்றாகி விடும்!

* பெட்ரோல் ரேஷன்



* இசை தெரியாமல்...



* எதிர்பார்ப்பு?





* அதிர்ச்சி வைத்தியர்!



* கூடுதல் பொறுப்பு



* பெருந்தன்மை!



* பார்வைக் கோளாறு?

# ஆயிரம் கஷ்டம் இருந்தாலும்...

'நல்லவேளை. மருமகள் வெளியே போய்விட்டாள். கேட்டுத்தான் பார்ப்போம்.' — பெற்ற மகனிடம் ஒரு சேலை கேட்பதற்குச் சீதையம்மாளுக்கு நேரம் காலம் கைகூடிவிட்டது.

"ராமசாமி... காட்டுக்குப் பொறப்பட்டுட்டயா?"

"ஆமம்மா. இன்னைக்கு மேலக்காடு வெதப்பு. பாழாப்போற மழை கொஞ்சம் பலமா பேஞ்சு தொலையாதோ? ரெண்டு நாளைக்குத்தான் ஈரம் தாங்கும் போலத் தோணுது. எப்படியும் சாயந்தரத்துக்குள்ள முடிச்சிரணும். அப்பத்தான் நாளைக்கு உம் புஞ்சைய விதைக்க முடியும். நாயா பேயா அலைஞ்சு கடன் வாங்கியிருக்கேன். ஈரம் ஒணர்ந்து போச்சுன்னா அப்புறம் வெதச்சு என்ன பிரயோஜனம்!"

பங்கு பாகத்தில் அம்மாவிற்கு விடப்பட்ட அன்ன உத்தர புஞ்சை மீது தனக்கு இருக்கும் அக்கறையையும் விதைப்புச் செலவிற்குத் தான் கஷ்டப்பட்டுக் கடன் வாங்கியிருப்பதையும் வெளிக்காட்டிக் கொண்டான் ராமசாமி.

"சரிப்பா. போயிட்டு வா. நானும் சாத்தூர்ல தம்பி வீட்டுக்குப் போய் வரேன்." சேலை கேட்க வந்தவளின் நாவில், ஈரம் உடனடியாக உலர்ந்து விட்டது.

மகனைத் தொடர்ந்து வாசல்வரை வந்து தெருவில் சகுனம் பார்த்தாள். பசுக்கூட்டம் எதிர்வந்தது-பூரித்துப் போனாள். வீட்டிற்குள் திரும்பியவள் ஈசான மூலை நோக்கித் தொழுது மாரித்தாயையும், பூமித்தாயையும் வேண்டோ வேண்டு என்று வேண்டி முடித்தாள்.

'சரி; சாத்தூருக்குப் புறப்படுவோம். பாவம் இவனுக்கு வெதப்பு நேரம். இவன்கிட்டே இப்போ நம்ம சேலை கேக்குறது நமக்கே நல்லாயில்லை. மூர்த்தி டவுன்ல உத்தியோகம் பாக்கிறவன்தானே. அவன்கிட்டே கேட்டுப்பார்ப்போம். எடுத்துக் குடுக்காமலா போயிருவான். ஏதோ இது வரைக்கும் நம்மால ஓடியாடி பாடுபட முடிஞ்சது. அந்தப் புண்ணியவாளன் போய்ச் சேர்ந்து இவ்வளவு நாளாகியும் மூணு பிள்ளைங்க கையையும் எதுக்கும் இதுவரை எதிர்பார்க்கல. ஆனா இப்ப நம்மால ஒண்ணும் முடியலியே. இருக்கிற ரெண்டு சேலைல ஒண்ணு நைஞ்சு போச்சு. அது நார்நாராப் போறதுக்குள்ள கட்டாயம் ஒண்ணு எடுத்தாகணுமே. என்ன செய்யறது. தன்னாமை நினைவுகள் அலைக்கழிக்க, வீட்டின் ஒரு மூலையிலிருந்த தனது கைநாழியை எடுத்தாள். அதில் அவ்வப்போது போட்டு வைத்திருந்த சில்லறைகளைக் கையிலெடுத்துக் கண்ணுக்கருகில் வைத்துக் கணக்குப் பார்த்தாள். டவுன் பஸ்ஸுக்குத் தேறிவிட்டது.

மூர்த்தி பிரியமாகவே வரவேற்றான். "ஊர்ல எப்படியம்மா? நெலமெல்லாம் விதைச்சாச்சா; போன வாரமே அண்ணன் இங்க வர்றதாச் சொல்லியிருந்தார். ஏன் வரலேம்மா?" இவ்வாறு அன்புடன் விசாரித்தவன் ஏனோ கொஞ்சம் அவசரமாகவும் காணப்பட்டான். "லட்சுமி..." என்று குரல் கொடுக்க, "இதோ வந்துட்டேன்" என்றவாறே அவள் இரண்டு தட்டில் இட்லி கொண்டு வந்து வைத்தாள். "வரும்போதே ஊர்ல நான் பழசு சாப்பிட்டுட்டு வந்துட்டேம்மா. பசியில்ல. காப்பித் தண்ணி குடு; போதும்" என்று மறுக்க, "சும்மா... ரெண்டு இட்லியாவது சாப்பிடுங்க" எனும் மருமகளின் பிரிய வற்புறுத்தலில் மகிழ்ந்து போனாள் சீதையம்மாள். ஆனால், அவளால் காப்பி மட்டுமே குடிக்க முடிந்தது.



டிபன் முடிந்தது. "அப்போ நான் புறப்படுறேன் லட்சுமி. அம்மா... நான் மதுரைக்கு அவசரமாப் போக வேண்டியதிருக்கு. பரீட்சை ஒண்ணு எழுதணும். அத எழுதிப் பாஸ் பண்ணினாத்தான் தாசில்தார் மாதிரி பெரிய ஆபீஸரா வரமுடியும் . போயிட்டு வர்றேம்மா" என்று சொல்லிக் கொண்டே அவசரமாகக் கிளம்பினான் மூர்த்தி.

வந்த காரியத்தையும் மறந்து அவனைவிட அவசரமாகத் தலையசைத்தாள் சீதையம்மாள். 'ஆத்தா.... இருக்கங்குடியாளே நீதான் துணை. எம்பிள்ளை நல்லா பரீட்சை எழுதிப் பாசாகணும். பெரிய ஆபீசர் ஆகணும். அப்படி ஆயிட்டா அவன் கையால உனக்கு ஆடி கடைசி வெள்ளிக்குப் பட்டு எடுத்துச் சாத்தச் சொல்றேன்.' மனத்திற்குள் ஆயிரம் பிரார்த்தனைகள்; நேர்த்திக் கடன்கள்.

"எம்மா... லட்சுமி... மூர்த்தி பரீட்சை முடிஞ்சு ஊர் திரும்ப ராவு ஆயிருமோ?"

"அவர் இன்னைக்கு வரமாட்டார் அத்தே. அவர் வர மூணுநாள் ஆகும்."

"மூணுநாள் ஆகுமா. சாயந்தரம் நான் ஊருக்குப் போகலாம்னு பார்த்தேன்..."




"ஊர்ல அப்படி என்ன அவசரம்? அவர் வந்தபிறகுதான் போங்களேன்."

"போகலாம். இருந்தாலும் மூணுநாலு நாள் நான் இங்க என்ன செய்யப் போறேன். வேற ஒண்ணுமில்ல லட்சுமி. மூர்த்தி வந்ததும் சொல்லு. எனக்கு ஒரு சேலை வேணும்."

லட்சுமியிடமிருந்து பதில் வரவில்லை.

"ரெண்டு சேலைல ஒண்ணு நைஞ்சு போய் இப்பவோ பிறகோன்னு இருக்கு. மூத்தவன் கிட்டக் கேக்கலாம்னு பார்த்தேன். வெதப்பு நேரமாச்சா. அங்க இங்க கடன் வாங்கிக்கிட்டு ரொம்ப கஷ்டப் படுறான்....."

"ஏன் கஷ்டப்பட மாட்டாங்க! வருசா வருசம் இங்கதான் வந்து வாங்கிக்கிட்டு போவாங்க. திருப்பிச் சல்லிக் காசு கொடுக்கிறதில்லை. சரி அதான்போவுது. இவருக்குப் பாகம் பிரிச்சுவிட்ட நெலத்தையும் அவங்கதானே வெள்ளாம செய்யுறாங்க... இத்தனை வருசமாச்சே; பயறுபச்சைன்னு பேருக்காவது எங்க கண்ணுல கொஞ்சம் காட்டியிருப்பாங்களா. இத்தனையும் அனுபவிச்சுக்கிட்டு, பெத்த தாயிக்கு ஒரு சேலை கூட எடுத்துத்தரக்கூடாதா? இவ்வளவு பேசுறனேன்னு சங்கடப்படாதீங்க. கஷ்ட நஷ்டம் உலகத்துல எல்லாருக்கும் இருக்கு. உங்களுக்குச் சேலைதானே வேணும். உங்க மகன் வந்ததும் தாராளமாக் கேட்டு வாங்கிக்கிட்டுப் போங்க. நான் ஒண்ணும் குறுக்க நிக்கல." கழன்று கொண்டாள் லட்சுமி.

அவளது பேச்சிலிருந்த கனல் வெகுவாகத் தாக்கியபோதும் அதிலிருந்த நியாயம் சிதையம்மாளை மௌனமாக்கியது. யார் என்ன சொன்னாலும் மறுகணமே அது நியாயந்தான் என மனசில் பட்டு விடும் ஒருவிதப் பக்குவம் அவளுக்கு.

மதியச் சாப்பாடு முடிந்தது. சிதையம்மாளின் மனத்தில் தனது மூன்றாவது புத்திரனின் முகம் நிழலாடியது. லட்சுமியிடம் மெல்லக் கேட்டாள். "உங்க சின்ன மாமன் இப்போதுக்குள்ள இங்க வந்தானா லட்சுமி?"

"அந்தக் கூத்து தெரியாதா அத்த உங்களுக்கு! போன மாசம் வந்தாரு. ரமேஷை இஞ்சினியரிங் காலேஜில சேர்க்கணும். அம்பதாயிரம் கேக்குறாங்க. நீ ஒரு பத்தா





மிரமாவது கொடு. திருப்பிக் கொடுத்துர்றேன்னு சொல்ல, இவர் தன்கிட்ட இல்லாத குறைய எவ்வளவு எடுத்துச் சொல்லியும் கேக்காம, ஒரே பிடிவாதம் பண்ணி ஐயாயிரம் வாங்கிக்கிட்டு போனாரு. அது அவ்வளவுதான்.... இனி என்ன திரும்பி வரவா போகுது! சிவகாசியில வரி ஆபீசில வேலை பார்க்கிறார். என்ன கொள்ளை வந்துச்சு. அவருக்கும் நாங்கதான் அழுணுமா. எங்களுக்கென்ன பிள்ளைகுட்டி இல்லியா? தன்னால முடியாட்டி என்ன இஞ்சினியர் படிப்பு வேண்டிக் கெடக்கு!''

'அப்போ என் பேரன் ரமேஷ் பெரிய இஞ்சினியரா வந்துருவான்.' இருக்கன் குடியாளை மீண்டும் மனத்திற்குள் பிரார்த்தித்துக் கொண்ட சீதையம்மாள் சிவகாசிக்குச் செல்லலாமா எனச் சற்றுமுன் இலேசாகத் தோன்றிய தனது மனத் தூண்டுதலைச் சட்டென்று துண்டித்துக் கொண்டாள்.

பஸ்ஸில் ஊர் திரும்பிக் கொண்டிருக்கும்போதே மேகம் இருட்டிக் கொண்டு வந்தது. இடையிடையே மின்னல் கீற்றுகள். சேலை கிடைக்காத கவலை மனத்தில் சீதையம்மாளுக்கு மண்டிக்கிடந்த போதும் பரீட்சை எழுதி ஒரு மகன் தாசில்தார் ஆகப் போகிறான்; பேரன் ஒருவன் இஞ்சினியர் ஆகப்போகிறான். இதோ மழை பெய்யப் போகிறது. நல்லா வெளைஞ்சு மூத்தவனும் சுகப்படப் போகிறான்... சந்தோஷக் கீற்றுகள் மின்னிக் கொண்டே இருந்தன.

பஸ் ஸ்டாப்பில் இறங்கியதுதான் தாமதம். மெல்ல தூறிக்கொண்டிருந்த மழை, சொல்லி வைத்ததுபோல் பலத்துக் கொண்டது. பெய்த மழை அத்தனையும் இவள் தலையில்தான் விழுந்தது போலும். வீடு வந்து சேர்வதற்குள் கிடுகிடுவென நடுங்கும் கோழிக்குஞ்சாகக் குறுகிப் போனாள். ஈரத்தினின்று ஒருவாறாக விடுபட்டு நைந்த சேலைக்குள் ஒடுங்கிக் கொண்டாள்.

நல்ல மழை பெய்த சந்தோஷம் வீடு முழுவதும் பரவியிருந்தது. மகனும், மருமகளும், பேரப்பிள்ளைகளும் கலகலப்பாகப் பேசிக் கொண்டே பாய்விரிக்கும் சப்தம் காதில் பட்டு, குளிர்ந்தது. ஆனால், இவளுக்குத்தான் எவ்வளவு முடங்கி முடங்கிப் படுத்த போதும் இரவு முழுவதும் தூக்கம் பிடிக்கவில்லை.

காலையில் எழும்போதே தலை கனத்தது. தொடர்ந்து குளிர் ஜுரம்! இராமசாமி துளசிச் செடி பிடுங்கி வந்தான். சுக்கு கஷாயம் தயாரானது. ''வெறும் கஷாயத்துல என்ன ஆகும். நான் போய்க் கடையிலே காய்ச்சல் மாத்திரை வாங்கிட்டு வரேன்.'' அக்கறையோடு புறப்பட்ட மருமகள் இரண்டு அனாசின் மாத்திரைகளை




தபாலில் 'ஆங்கிலம்' பயில அனைவரும் ஆசியன் இன்ஸ்டிட்யூட்டையே அணுகுவதற்கு பல அநுகூலமான காரணங்கள் உள்ளன. என்ன அவை ?...

நடைமுறையில் சிலர் M.A., படித்த ஆசிரியராக இருப்பர். அவரிடம் உயர்ந்த புலமையும் இருக்கும். ஆனால் அவர் கற்றுத்தரும் பாடங்கள் கடினமாக இருக்கும். எவருக்கும் புரியாது. புரியும் விதத்தில் M.A., படித்தவருக்கு கற்றுத்தரத் தெரியாது. உதாரணமாக, கர்நாடக இசை உயர்ந்த இசைதான். ஆனால் புரியும் வண்ணம் கற்றுக் கொடுத்தால்தானே அதனை எளிதில் கற்க இயலும்.

மெல்லிசை அனைவருக்கும் புரியும். எங்கள் பாடங்கள் மெல்லிசை போல் அமைந்தவை. பாமரனுக்கும் புரியும். அதுமட்டுமல்ல; படிக்கப் படிக்க ஆவலைத் தூண்டும் நீங்கள் எமது பாடத்தின் பக்கங்களை பரபரப்போடு புரட்டு வீர்கள். தொடர்கதை படிப்பதைப் போன்ற மன நிலையில் தாங்கள் மாதாமாதம் பாடங்களை தபால் காரரிடம் பெறுவீர்கள்.

ஆரம்பக் கல்வியிலேயே ஆங்கிலத்தை சரிவர படிக்காதவரா நீங்கள் ? மேல்நிலைப் பள்ளியில் மேலோட்டமாக கவனமின்றி ஆங்கிலத்தை கற்றவரா நீங்கள் ?

பள்ளி அல்லது கல்லூரியில் மனப்பாடம் செய்து படித்துவிட்டு இப்போது ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என வருந்துபவரா நீங்கள் ?

எந்த நிலையினராக நீங்கள் இருந்தாலும், போற்றத் தக்க விதத்தில் ஆங்கிலத்தில் பேசவும், எழுதவும் எளிய தமிழில் தபாலில் மிகச்சிறந்த பயிற்சி பெறலாம். இது தொடர்பான இலவச விபரங்கள் பெற ஒரு போஸ்ட் கார்டில் உங்கள் நிலையை எழுதி ஆசியன் இன்ஸ்டிட்யூட், பொன்மேனி (P.O.) மதுரை-10 என்ற எமது முகவரிக்கு அனுப்புங்கள்.

### அக்கவுண்டன்சி

8வது படித்தவர் முதல் எல்லோரும் தபாலில் தமிழ்மூலம் இப்பயிற்சி பெற்று கணக்கராகி மாதம் ரூ. 3000 வரை சம்பாதிக்க சுய வேலைவாய்ப்புப் பயிற்சி. இந்தியா முழுவதும் வேலைவாய்ப்புள்ள பயனுள்ள பயிற்சி.

இவ்விரு பயிற்சிகளில் எந்தப் பயிற்சியில் சேர விரும்புகிறீர்கள் என்பதை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி அனுப்புங்கள். உங்கள் வீடு தேடி இலவச விபரங்களை அனுப்பி வைக்கிறோம்.

**ஆசியன் இன்ஸ்டிட்யூட்**
**பொன்மேனி (P.O.) மதுரை-625010**

KASINDIA

வாங்கிக் கொண்டு திரும்பும்போது தெருவில் எதிர்ப்படுவோரிடம், ''அத்தைக்குக் காய்ச்சல்; மாத்திரை வாங்கிக்கிட்டுப் போறேன். வயசான காலம் யார் பார்ப்பா. நம்மதானே பாக்கணும்,'' என்ற ஒரே டயலாக்கைக் குறைந்தது பத்துப்பேரிடமாவது சொல்லி முடித்து விட்டு வீட்டிற்கு வந்தாள்.

வியர்த்து உடனடியாகக் காய்ச்சல் விட்டது. உடம்பின் பாரம் குறைந்து தெம்பு வந்தது. கஞ்சி குடித்தாள். எல்லாம் ஒரே நாள்தான். மறுநாள் திடீரென்று சீதையம்மாளுக்குச் சிவலோகப் பதவி கிடைத்து விட்டது.

'புண்ணியவதி. யாருக்கும் எந்த சிரமமும் வெக்கல. பொட்டுனு போயிட்டா.' ஊர் வாய்கள் விரித்தன. பந்தலில் கன ஜோராகக் கரிசல்குளம் மேளதாளம் முழங்கிக் கொண்டிருக்க நாயனக்காரன், ''அன்னையைப் போல் ஒரு தெய்வமில்லை'' மெட்டை மிக உருக்கமாக அவனது அம்மாவை நினைத்துக் கொண்டு வாசித்து உருகினான். ஒருபக்கம் பெரியவர் ஒருவர் செலவுக் கணக்கை அவ்வப்போது தவறாது எழுதிக்கொண்டிருந்தார். உறவு, நட்பு, சுற்றம், சூழல், பூமணம் தாங்கிய தேர் என்று ஒரு குறையும் இல்லை. புகுந்த இடத்துக்கோடி, பிறந்த இடத்துக்கோடி என உறவு முறையின் தும்பைப்பூ வெள்ளை ஆடைகள் சீதையம்மாள் வாய் திறக்காமலேயே இன்று வந்து தழுவிக் கொண்டன. பூமி வாசல் திறந்து அந்தப் புண்ணியவதியை மூடிக் கொண்டது.

சம்பந்தக்காரர்கள் ஒன்றுகூடி பதினாறாம் நாள் காரியம்பற்றிப் பேசினார்கள். தத்தமது சிரமமான சூழ்நிலைகளை அவரவர் புத்திரிகளிடம் வலிந்து வலிந்து ஒப்பாரி வைத்து, ''உருமா கட்ட உங்க வீட்டுக்காரர்களுக்கு மட்டும் இப்போ வேஷ்டி துண்டு எடுத்துக்குவோம். வேணுமானால் சட்டைத் துணியும் எடுத்துறுவோம். நீங்க எங்க புள்ளைங்கதானே. உங்களுக்குச் சேலை எப்ப வேணும்னாலும் எடுத்துக்கிடலாம். கொஞ்சம் பொறுத்துக்கோங்க...'' என்று சொன்னதை, மூன்று பெண்களுமே ஒப்புக் கொள்ளவில்லை. ''சபையில கட்டாத சேலை பின்னால எதுக்கு? எங்களுக்கு மட்டுமில்ல எங்க பிள்ளைங்க அவங்க பாட்டிக்கு நெய்ப் பந்தம் பிடிச்சிருக்காங்க. அந்தத் தீட்டு கழிய வேண்டாமா. அவங்களுக்கும் நீங்க புதுத்துணி எடுத்தே ஆகணும். ஆயிரம் கஷ்டம் இருக்கட்டுமே. அதுக்காக முறைப்படி செய்ய வேண்டிய எதையும் தட்டிக் கழிக்கலாமா. ஊர் உலகம் என்ன பேசும்.'' தந்தைக்கு உபதேசம் செய்து தகப்பன் அம்மன்களாய்ச் சுடர் விட்டனர். பெற்றவர்களுக்கு ஒப்புக் கொள்வதைத்தவிர வேறுவழி!

தீர்மானித்தபடி பதினாறாம் நாளில் உத்திரகிரியை; உருமாக் கட்டு. சீதையம்மாவின் மகன்களும், மருமகன்களும், பேரப்பிள்ளைகளும் புதுசில் ஜொலித்தனர். சம்பந்தகாரர்கள் யாருக்கு யார் விட்டவர்கள் என்பது போல் ஒருவரையொருவர் பார்த்து உதட்டை மட்டும் மலரவைத்துக் கொண்டார்கள். ஒவ்வொருவரும் மற்றவர்களுக்குக் கேட்கும்படி பிரபலமான ஜவுளிக்கடைகளின் பெயர்களையெல்லாம் கிலோ மீட்டர் கணக்கில் அளந்து கொண்டிருந்தார்கள்.

அங்கே புத்தாடை மணத்தால் பூமிவாசல் திறந்து விட்டதோ. அதோ... சீதையம்மாள் பூரிப்போடு வலக்கரம் தூக்கி நெஞ்சு நிறைய தன் குலக்கொழுந்துகளை ஆசீர்வதிக்கிறாளே!

## ஒரு பட்ஜெட் விமர்சனம்!

''இந்த வருட மத்திய பட்ஜெட், கிராமப்புற வளர்ச்சிக்கு மிகவும் உதவி புரியும். அதே சமயம், பெட்ரோல், டீசல் விலை உயர்வு, ஒட்டுமொத்தமான விலைவாசி உயர்வுக்கு வழிசெய்யும். நல்ல காலம்! மண்ணெண்ணெய், காஸ் விலை ஏறவில்லை. எவர்சில்வர் பாத்திர விலை குறையும் என்பது இல்லத்தரசிகளுக்குச் சந்தோஷமான விஷயம். பட்ஜெட்டில் உள்ள பற்றாக்குறை அச்சமளிப்பதாய் இருக்கிறது. உள்நாட்டுக் கடிதக் கட்டணங்களில் ஏற்பட்டுள்ள விலையேற்றம் மத்தியதரக் குடும்பங்களை மிகவும் பாதிக்கும்.''

— இப்படி பட்ஜெட்டை விமர்சிப்பவர், இல்லத்தரசி பிரமீளா. இவர் யார் தெரியுமா? மத்திய நிதியமைச்சர் மதுதண்டவதேவின் மனைவி!

தகவல்: ஜூலி

''தக்காளி காய்கறி வகையைச் சேர்ந்ததா அல்லது பழ வகையைச் சேர்ந்ததா'' எனும் ஓர் வழக்கு கிட்டத்தட்ட 100 வருடங்களாக பாஸ்டன் நீதிமன்றத்தில் நடந்து, சமீபத்தில் அது ''காய்கறி வகையைச் சார்ந்தது'' என்று தீர்ப்பாகியுள்ளது. 1893ம் ஆண்டு தக்காளியானது நியூயார்க்கிலிருந்து பாஸ்டன் நகருக்கு கொண்டு வரப்பட்ட போது அது பழ வகையைச் சார்ந்தது என்று பத்து சதம் நுழைவு வரி விதிக்கப்படவே தக்காளி நீதிமன்றம் ஏற வேண்டியதாகி விட்டது!

— சக்தி. ஏ. ஜே. ஜப்பார்.





# 9 புண்பட்ட உள்ளம்

* மு. கருணாநிதி: ராஜாஜியின் மனத்தைப்...



* என். ஜி. ரங்கா: ...புண்படுத்தியவர்கள்.

மசானிக்குப் பிறகு டாண்டேகர் சில காலமும், அதன் பிறகு எச். எம். பட்டேலும் சுதந்திரக் கட்சியின் தலைவர்களாகப் பொறுப்பேற்று நடத்தினார்கள். 1972 ஜூன் மாதம் பொதுக் குழு கூடிய போது, ராஜாஜி அதில் கலந்து கொண்டார். அப்போது பிலு மோடி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பிறகு சென்னையில் ராஜாஜியைச் சந்தித்த டாண்டேகர், 'சுதந்திரக் கட்சிக்குப் பணக்காரர் கட்சி என்பதாக முத்திரை குத்தப்பட்டு விட்டதனால், பெயரை மாற்றலாமா?' என்று ஒரு யோசனையை வெளியிட்டார். ஒரு கணம், இந்த யோசனையை ஏற்பார் போலத் தோன்றினார் ஸி. ஆர். ஆனால், எந்தப் பெயர் சூட்டினாலும் உடனே அதற்கும் "பணக்காரர் கட்சி" என்ற அவதூறைச் சுமத்தி விடுவார்கள் என்பதை உணர்ந்து, யோசனையை நிராகரித்தார். எனினும், சுதந்திரக் கட்சியின் முக்கிய புள்ளியான டாண்டேகர் கூட, இப்படிப் பெயரை மாற்ற வேண்டும் என்று சிந்திக்க முற்பட்டதானது, கட்சியில் கட்டுப்பாடு தளர்ந்து, பலருக்குச் சோர்வு ஏற்பட்டு வருவதை உணர்த்தியது.

என். ஜி. ரங்காவிடம் ஏற்பட்ட மாறுதல் தான் ஸி. ஆருக்குப் பலத்த அடியாக விழுந்தது. ஸி. ஆரின் நீண்ட கால நண்பர்களில் ஒருவரும் பத்து ஆண்டுகளாக சுதந்திரக் கட்சியின் தலைவராக விளங்கியவருமான ரங்கா, பங்களாதேச வெற்றிக்குப் பிறகு, 'இந்திரா காந்தியின் தலைமையை ஏற்க வேண்டும்' என்பதாகப் பேச ஆரம்பித்தார். சில மாதங்கள் கழித்து இந்திரா காங்கிரஸிலேயே சேர்ந்தும் விட்டார்! "அவர்களை வெல்ல முடியவில்லையானால் அவர்களுடன் சேர்வதே நல்லது. அப்படி சேர்ந்த பிறகு அவர்களிடம் மனமாற்றத்தை உண்டு பண்ண முயற்சி செய்யலாம்!" — ரங்காவின் இந்த வாதத்தை, தனிப்பட்ட முறையிலும் சுயராஜ்யாவில் எழுதியதன் மூலமும் கடுமையாக எதிர்த்தார் ஸி. ஆர். எதிர்த்து வாதாடுவது ஒருபுறமிருந்தாலும், அவர் மனம் ரொம்பப் புண்பட்டுப் போயிற்று. இந்திரா காங்கிரஸில் ரங்கா சேர்ந்ததும் ஸி. ஆர். எழுதினார்:

"இதுவரை இந்திய மக்கள் அவருக்குக் கொடுத்து வந்த மரியாதையை இனி தர மாட்டார்கள். இந்திரா காந்தியின் நம்பிக்கையையும் அவரால் இனி பெற முடியாது. தனிப்பட்ட முறையில் இந்தக்கட்சித் தாவல் அவருக்கு எந்தப் பலனையும் அளிக்காது. நாட்டு நலனுக்கும் எந்த விதத்திலும் உதவாது (சுயராஜ்யா 12.8.72.)

தேர்தலில் அடிவாங்கி ஆறே வாரங்களுக்குள் ஸி. ஆர். மீண்டும் சுதந்திரக் கட்சியின் கொள்கைகளுக்காக வாதாட ஆரம்பித்தார்: "இந்தச் சிறந்த கொள்கைகள் இந்திய அரசின் கொள்கைகளாக மாறவே செய்யும். இன்றில்லாவிட்டாலும் எதிர்காலத்தில் — சில ஆண்டுகளில் — இந்தக் கொள்கைகள் அரியாசனம் ஏறும். நமது நாட்டில் உள்ள ஏழைமையையும் நோயையும் நீக்கச் சுதந்திரக் கட்சியின் திட்டங்களே சாலச் சிறந்தவை என்பதை விளக்கி, நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்யக் கூடிய அளவில் நான் இளைஞனாக இருக்கக் கூடாதா என்று ஏங்குகிறேன்!"

இந்திரா காந்தி தமது மகத்தான வெற்றியைத் தொடர்ந்து, அரசியல் சாசனத்தை மாற்றி, அடிப்படை உரிமைகளைக் குறைக்கத் திட்டமிட்டார். இந்தக் கட்டத்தில் சுதந்திரக் கட்சிக்கு மிக முக்கியமான, பொறுப்பான வேலை இருப்பதாக ராஜாஜி எழுதினார். "இந்திரா உத்தேசித்துள்ள காரியம்,



''உன்னைப் பெண் பார்க்க வந்தவர் உன்னைத் தனியா அழைச்சுக்கிட்டுப் போய் என்ன கேட்டார்?''

'''நாங்க கேட்ட வரதட்சணையெல்லாம் கண்டிப்பா உங்கப்பா செய்வாரா'ன்னு....''

—மணியன் தர்மலிங்கம்.

நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கித் தந்த பெரியோர்களைக் கைவிட்டு, அவமானப்படுத்துவது போல் ஆகும்'' என்றார்.

சாசன மாறுதல்களைப் பழைய காங்கிரஸ் எதிர்க்கவில்லை. ''ஆளும் காங்கிரஸைப் போலவே, ஸ்தாபன காங்கிரஸும், சோஷலிஸம் என்ற நிழலைத் துரத்திக் கொண்டு ஓடுகிறது'' என்று எழுதினார் ஸி. ஆர்.

''சொத்துரிமை உள்பட சாசனத்தில் மக்களுக்கு வழங்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பதில் நாம் ராஜ விசுவாசம் காண்பிப்போம். ஹிட்லருக்கு எதிராக பிரிட்டனை எவ்வளவு கஷ்டப்பட்டு சர்ச்சில் காப்பாற்றினாரோ, அதே போல் நாமும் பாடுபடுவோம். பயந்து அடி பணிய மாட்டோம். எரிகின்ற கப்பலை விட்டுத் தப்பிச் செல்ல முற்படாத கப்பல் தலைவனைப் போல் நாம் உறுதியாக இருப்போம்.''

மெஜாரிடி பலம் அபரிமிதமாக இருந்ததால், இந்திராவின் சாசன மாறுதல்கள் நிறைவேறின. ஆனால் கணிசமான அளவில் எதிர்ப்பு இல்லாமல் போகவில்லை.

''மக்கள் அவையிலும் மாநிலங்கள் அவையிலும் உள்ள சுதந்திரக் கட்சி உறுப்பினர்கள் சொற்பம் பேர்தான். ஆனாலும் இவர்கள் சாசனத்தைச் சின்னாபின்னப் படுத்துகிறவர்களை எதிர்த்து, அச்சமின்றி வோட்டளித்தார்கள். எதிரியின் அபரிமித பலத்தைக் கண்டு இவர்கள் திகைத்துவிடவில்லை என்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்.''

சாசன மாறுதல்களைத் தீவிரமாக எதிர்த்த மொரார்ஜி தேசாய் போன்றவர்கள், சுதந்திரக் கட்சியுடன் சேர்ந்து ஒரு பாதுகாப்பு அணி அமைக்கலாம் என்ற யோசனையைத் தெரிவித்தார் ஸி. ஆர். இந்த அணி, ஒரு தனிக் கட்சியாகிவிடாது. ஒரு குறிப்பிட்ட காரியத்துக்காக அமைக்கப்பட்ட கூட்டுறவு முயற்சியாக விளங்கும். இதில் பல்வேறு கட்சிகளைச் சேர்ந்தவர்கள் மட்டுமின்றி, இதன் லட்சியத்தில் நம்பிக்கை கொண்ட அனைவரும் சேரலாம்.

அரசியல் சாசனத்தை உருவாக்கி, அதில் மக்களின் அடிப்படை உரிமைகளை உறுதி செய்தவர்களை நினைவுகூர்ந்த ஸி. ஆர். எழுதினார்:

''எல்லோருமே அரசியல் சாசனத்துக்கு எதிராகச் சதி செய்தாலும் சரி, அல்லாடி கிருஷ்ணசாமி, வல்லபபாய் பட்டேல், ராஜன்பாபு, கே. எம். முன்ஷி போன்றவர்களை நான் கைவிட மாட்டேன். சாசனத்தின் புனிதத்தைக் குறைத்துத் தகாத வழிகளில் பயன்படுத்துவதன் அறிவின்மையை எதிர்த்து, என் கடைசி மூச்சு வரை போராடுவேன்.''

அரசியல்சாசனம், அடிப்படை உரிமைகள் போன்ற மகத்தான விஷயங்களுக்காகப் போராடிய ஸி. ஆர்., சின்ன விஷயம் என்று எதையும் ஒதுக்கிவிட மாட்டார்.

தமிழக ஆளுனரை அந்த மாளிகையிலிருந்து கிளப்பி, வேறு எளிய இல்லத்தில் குடியிருக்கச் செய்கிற தமிழக முதல்வரின் திட்டத்தைக் கடுமையாக எதிர்த்து, காரண காரியங்களை விளக்கி, புதுதில்லியில் உள்துறை அமைச்சருக்கு எழுதினார். (திட்டம் கைவிடப்பட்டது.)

அரசு அதிகாரி ஒருவர், ஸி. ஆருக்கு எழுதியிருந்த ஒரு கடிதத்தில், முதல்வரை ''டாக்டர் மு. கருணாநிதி'' என்று குறிப்பிட்டிருந்தார். ஒரு டஜன் கௌரவ டாக்டர் பட்டங்களைப் பெற்றிருந்த ஸி. ஆர்., அந்த அதிகாரிக்கு எழுதிய பதிலில், ''டாக்டர் பட்டத்தை உரிய முறையில் பெறாமல், கௌரவப் பட்டமாகப் பெறும்போது, அதைப் பெயருக்கு முன்பு பயன்படுத்துவது மரபு அல்ல'' என்று எடுத்துக் காட்டினார்.

ஆர். பி. கைத்தான் என்ற எம். பி., 'பெண்ணைவிட ஆணுக்கு வயது பதினைந்துக்கும் அதிகமாக இருந்தால், அவர்களுக்கிடையே விவாகம் தடை செய்யப்பட வேண்டும்' என்று ஒரு தனி நபர் மசோதாவை நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்தார். ராஜாஜி உடனே இதனை எதிர்த்து, 'திருமணம் என்பது, தனி நபர் விஷயம்; அந்தரங்கமான விஷயம். அதில் தலையிட அரசுக்கு அனுமதி கிடையாது'' என்று கூறியதுடன், வயது வித்தியாசம் அதிகமிருந்த போதிலும் சந்தோஷமாக வாழ்ந்த தம்பதிகள் பலர் உண்டு என்பதற்கு இலக்கியங்களிலிருந்து பல உதாரணங்களை எடுத்துக் காட்டினார்.

1971 தேர்தல் தோல்வியைவிட பலமான, வேதனை தந்த ஓர் அடி, ஸி. ஆரின் பேரில் விழுந்தது என்றால், அது, தமிழ்நாட்டில் மதுவிலக்கு ரத்து செய்யப்பட்டது தான்.

(தொடரும்)



# உயரங்கள்

ரா. நாகராஜன்

நேற்று வரை தெரியாத வித்யாசம் இன்று தெரிகிற மாதிரி இருந்தது சித்ராவுக்கு.

மூத்த இரண்டு மாப்பிள்ளைகளும் கௌரவமாக ஒதுங்கி நிற்கும் போது தன் கணவர் மட்டும் மச்சினியின் கல்யாணத்தில் விழுந்து விழுந்து வேலை பார்ப்பதும் —

மாப்பிள்ளை என்று கூடப் பார்க்காமல் அப்பாவும், மாமாவும், ஏன் சொந்த தங்கை அகிலாவும் அவரை ஒவ்வொரு விஷயத்தையும் செய்யச் சொல்லி ஏவுவதும் —

''மாப்பிள்ளை! தாலி கட்டி முடிச்சதும் ஜூஸுக்கு ஏற்பாடு பண்ணிடுங்கோ.''

''பேஷா...''

சமையல்காரருக்கு ஆர்டர்கள் பறந்தன.

''சம்பந்திக்காரா வர்ற போது இட்லி காலியாயிடாம... தனியா எடுத்து வைக்கச் சொல்லுங்கோ மாப்பிள்ளை.''

''ஏற்கெனவே சொல்லிவிட்டேன்...''

ஃபோட்டோவில் மற்றவர்கள் தலை காட்ட ஆசைப்படும்போதெல்லாம் இவர் மட்டும் ஒரு மூலையில் ஏதாவது ஒரு வேலையைச் செய்து கொண்டு —

''அத்திம்பேர் என் ஃப்ரெண்ட்ஸைக் கொஞ்சம் நல்லா கவனிச்சுக்கோங்கோ'' — என்று சொன்ன அகிலாவின் வார்த்தையைக் கட்டளையாக ஏற்று மற்றவர்கள் கவனிப்பதைக் கூட பொருட்படுத்தாமல் அந்தக் கல்லூரி மாணவிகளை டிபனுக்குக் கூட்டிப் போய்... ''இனிமேல் யார் வீட்டு விசேஷமானாலும் சித்ரா ஹஸ்பெண்டைக் கூப்பிடலாம் போலிருக்கே... என்னமா வேலை பார்க்கிறார் மனுஷர்!''

என்று ஓரிரண்டு பேர் முணு முணுத்த போது —

சித்ராவுக்கு உரைத்தது

இங்கே ஆளுக்கா பஞ்சம்? தோரணையாகத் தலையைக் காட்டி விட்டுப் போக வேண்டியதுதானே!

''சித்ரா ஜூஸ் சாப்பிடு...''

''ஏங்க... இதெல்லாம் சர்வர்ஸ் செய்ய மாட்டாங்களா....''

''இதோ பாரு. தாலி கட்டி முடிச்சதும் நம்ப கையால கொடுக்கற திருப்தி இருக்கே அது தனிதான்! நாமளே ட்ரீட் தர்ற மாதிரி....'' என்றார் சிரித்துக் கொண்டே.

ஒரு சின்னக் குழந்தை வந்து.

''மாமா எனக்கு...'' என்று கைநீட்டியது.

பந்தி ஆரம்பித்ததும் இலையில் ஸ்வீட் போட இவரைத்தான் கூப்பிட்டார்கள்.

மதியம் இரண்டு மணிக்குக் கூடத்தில் கிடைத்த இடத்தில் ஆள் ஆளுக்கு அலுப்பு தீரப் படுத்துக் கிடந்த போது — சித்ராவுக்கு நேரம் கிடைத்தது.

''ஏங்க.... மத்த ரெண்டு மாப்பிள்ளைகளுக்கு இல்லாத அக்கறை என்ன உங்களுக்கு? அவங்க மாதிரி வந்தோமா போனோமான்னு இல்லாம ஏன் இப்படி ஓவரா ஒர்க் பண்ணி உடம்பைக் கெடுத்துக்கறீங்க....'' என்றாள்.

இன்னும் நிறையப் பேச வேண்டும் என்று மனத்தில் தோன்றினாலும் இதற்கே என்ன சொல்லுவாரோ என்ற சந்தேகம்.

''சித்ரா ....நீ ஒரு விஷயத்தை மறந்துட்டே. இயல்பாவே நான் கலகலப்பானவன். அது தவிர உன் ரெண்டு அக்கா மாப்பிள்ளைகளும் பெரிய உத்தியோகம். ரொம்பச் செலவு பண்ணி ப்ரசண்ட் வாங்கிக் கொடுத்து அகிலா கவனத்தைக் கவர்ந்து இருப்பாங்க. நம்மனால நம்ம சக்திக்கு ஏதோ சுமாராச் செய்ய முடிஞ்சதுன்னாலும் அட்லீஸ்ட் என் திருப்திக்கு நான் உழைச்சதை அவ சரியாப் புரிஞ்சிண்டிருப்பா இல்லே...'' என்றார்.

அந்த மனத்தின் உயரம் அவளுக்குப் புரிந்தது.

நிச்சயம் அகிலாவும் அந்த அன்பில், உரிமையில்தான் தன் கணவரிடம் வேலைகளைச் சொல்லி இருப்பாள் என்று இப்போது தோன்றியது.

யார் என்ன நினைத்தால் என்ன... அகிலாவின் திருப்திதான் இன்று முக்கியம்.

''என்னை மன்னிச்சிடுங்க. ஸாரி, ஏதேதோ பேசிட்டேன்...''

''நோ... நோ.... சித்ரா இட்ஸ் ஆல் ரைட். இதைக் கேக்காம மனசில வைச்சிருந்தேன்னாத்தான் பின்னால கஷ்டம்...''

''அத்திம்பேர், உங்க கூட ஒரு ஃபோட்டோ. அக்கா! ப்ளீஸ் நீயும் வா....'' என்றாள் அகிலா!

# எதிரொலி: டீவிக்கு ஒரு தாலாட்டு



* இல்லானா மோகனாம்பாள்: பாராட்டி என்ன சொல்ல...?

''மெய்சிலிர்க்க வைத்து விட்டார்.''

''நாத வெள்ளத்தில் மூழ்கடித்து விட்டது.''

''மெய் மறக்கச் செய்துவிட்டார்.''

''இசை மழையில் நனைத்து விட்டார்.''

'எதிரொலி' நிகழ்ச்சியில் படிக்கப்பட்ட பதிநாலு கடிதங்களின் பெரும்பாலான வாசகங்கள் இப்படித்தான் இருந்தன. இவற்றை உண்மையான விமரிசனம் அல்லது கருத்து என்று எப்படி எடுத்துக் கொள்ள முடியும்? உண்மையில் அத்தகைய நிகழ்ச்சிகளா இடம்பெறுகின்றன்?

''நாம் எத்தகைய கடிதங்களுக்கு முன்னுரிமையளித்து வெளியிடுகிறோமோ அத்தகைய கடிதங்கள்தான் வரும்'' என்கிறார் பத்திரிகைத் துறையில் நீண்ட கால அனுபவம் பெற்றுள்ள நண்பர். அவர் மேலும் கூறியது:

''கடிதம் எழுதுகிறவர்களுக்குத் தங்கள் பெயர்கள் வெளியாக வேண்டும் என்பது தான் நோக்கம். நமக்கு எப்படிப்பட்ட கடிதங்கள் விருப்பமோ அப்படிப்பட்ட கடிதங்களை வரவழைப்பது ரொம்பவும் சுலபம். லேசாகக் கோடி காண்பித்து விட்டால் போதும். புரிந்து கொண்டுவிடுவார்கள். நீங்கள் பார்த்ததில்லையா? சில பத்திரிகைகளில் 'மரமண்டையே' என்று விளித்து எழுதப்படும் கடிதங்கள். வேறு சிலவற்றில் இத்தகைய 'மெய் மறந்து' போகும் கடிதங்கள்....''

அப்படியானால், டீ வி நிகழ்ச்சிகள் பற்றிய உண்மையான விமரிசனக் கருத்துக்களே வருவதில்லையா?

வருகின்றன. ஆனால் டீ வி நிலையத்துக்கு அல்ல. அவை வெளியாகும் இடமே வேறு. உதாரணத்துக்கு:

''வரவர சென்னை தூர்தர்ஷன் வழங்கும் 'வயலும் வாழ்வும்' நிகழ்ச்சிகள் விவசாயப் பெருமக்களுக்கு எந்த விதத்திலும் பயன்படக் கூடியதாக இல்லை. பேட்டி காண்பவர்கள் மிகவும் அடிப்படையான சம்பந்தமேயில்லாத கேள்விகளைக் கேட்கிறார்கள். பதில் அளிப்பவர்களோ, பண்ணை ஆராய்ச்சியில் சமீபத்தில் பெறப்பட்டுள்ள வளர்ச்சியுடன் எந்தத் தொடர்புமே இல்லாதவர்கள்...

— இப்படி ஆரம்பிக்கும் கடிதம் ஆக்கபூர்வமான ஓர் உதாரணத்தையும் வழங்குகிறது.

''வானொலியில் ஒலிபரப்பப்படும் பண்ணை நிகழ்ச்சிகள் போதிய அளவில் அமைந்திருப்பதோடு நோக்கத்தை நிறைவேற்றுபவையாகவும் உள்ளன. இவற்றைத் திட்டமிட்டுத் தயாரிப்பவர்கள் விவசாயத் துறையில் பட்டதாரிகள். உண்மையான, காலத்துக்கேற்ற தேவைகளைப் புரிந்து கொண்டிருப்பவர்கள் இவர்கள்...''

முடிவாகக் கடிதம், '' விவசாயிகளிடம் அக்கறை கொண்டு தூர்தர்ஷன் அதிகாரிகள் இந்த நிகழ்ச்சியின் மேம்பாட்டுக்கு வழிவகை காணவேண்டும்'' என்கிற வேண்டுகோளையும் விடுக்கிறது.

இக்கடிதம் எழுதியவர்: டாக்டர் எஸ். திருமூர்த்தி, 'என்டமாலஜி' துறை இணைப் பேராசிரியர், தமிழ்நாடு விவசாயப் பல்கலைக் கழகம், பவானிசாகர். கடிதம், 23.3.90 தேதியிட்ட இந்து நாளிதழில், 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' பகுதியில் வெளியாகியுள்ளது.

இந்த ஆண்டுக்கு இனிமேல் டீவியில் திரைப்படங்களே பார்க்கவேண்டியதில்லை. அந்த அளவுக்குத் திருப்தியேற்படுத்தி விட்டன இரண்டு தமிழ்ப் படங்கள். அதுவும் ஒரே நாளில். இரண்டிலுமே சிவாஜி — பத்மினி ஜோடி.

ஒன்று: 'இல்லானா மோகனாம்பாள்'

மற்றது: 'தாய்க்கு ஒரு தாலாட்டு.'

'இல்லானா மோகனாம்பா'ளைப் பாராட்டி என்ன சொல்வது? அநேகமாக, எல்லாப் பாராட்டு வாக்கியங்களையும் எல்லாரும் முன்பே சொல்லித் தீர்த்து விட்டார்கள். 'திரும்பவும் ஒரு முறை அந்தப் படத்தைப் பார்க்க வாய்ப்பளித்ததற்கு நன்றி' என்று சொன்னாலே போதுமானது.

இரண்டாவது படம் — சற்றுத் தயக்கத்தை ஏற்படுத்திய பத்தாம் பசலித் தலைப்பு. ஆனால் படம்? ரொம்பவும் 'டௌன் டு எர்த்.'

— கிச்சாமி

படம் உதவி: பிலிம் நியூஸ் ஆனந்தன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.



# நாள்முழுதும் புத்துணர்ச்சி நீடிக்கச் செய்யும் ஒரே டியோடரண்ட் டால்க்

இலவசச் சலுகை!




3 வெல்வெட் ஷாம்பூ சேஷேக்கள் 400 கிராம் டின்னுடன்.
1 வெல்வெட் ஷாம்பூ சேஷே 100 கிராம் டின்னுடன்.

வெல்வெட் லைம் டால்க். சர்வதேச டியோடரண்ட் அடங்கியது. நாள்முழுதும் உடலுக்கு புத்துணர்ச்சி நாள்முழுதும் எலுமிச்சையின் நறுமணம். இவற்றுடன் இணைபிரியாதிருப்பீர். ஆம். இணைபிரியாதிருப்பீர் வெல்வெட் லைம் டால்க்குடன். அருகாமையின் சுகத்தை அனுபவிப்பீர்.

புதிய
வெல்வெட்
லைம் டால்க் சர்வதேச டியோடரண்ட் அடங்கியது.

விநியோகஸ்தர்கள் : கோத்ரெஜ் சோப்ஸ் லிட்.

அருகாமை சுகம்!

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka